# மங்கை

ஏப்ரல் 1993

☆ வசந்தம் வந்தது

☆ புத்தாண்டுக் கவிதை

☆ சிறுகதைகள் நான்கு

☆ கட்டுரைகள் மூன்று

☆ புதிய தொடர்கதை

'கானப் பறவைகள்'

எழுதுபவர்: லட்சுமி ராஜரத்தினம்

மற்றும் வழக்கமான பகுதிகள் அனைத்தும்

விலை ரூ. 6/.

TA—F-1



# அம்புலிமாமா

### ஏப்ரல் 1993



## பொருளடக்கம்






**தனிப்பிரதி ரூ. 4-00.**

**வருட சந்தா ரூ. 48-00.**




# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகி ரெட்டி

## அமைதி நூற்றாண்டு

ஜனவரி 3 வரலாற்றுப்புகழ் பெற்றநாள். அன்று இரு வல்லரசுகளான அமெரிக்காவும் ரஷ்யாவும் அதுவரை அவர்கள் சேமித்த அணு ஆயுதங்களைக் குறைத்துக்கொள்வது என ஒரு ஒப்பந்தம் செய்து கொண்டன. அமெரிக்க அதிபர் புஷ் தான் பதவியிலிருந்து விலகுமுன் மாஸ்கோ போய் ரஷ்ய அதிபர் எல்ஸ்டினுடன் இந்த ஒப்பந்தத்தில் கையொப்பமிட்டார். இந்தச் செய்தி உலகின் எல்லா செய்தித்தாள்களிலும் முதல் பக்கத்தில் இடம் பெற்றது.



அதே தேதி காலையில் நடந்த ஒரு நிகழ்ச்சியோ சில செய்தித் தாள்களில் எங்கோ ஒரு மூலையில் மிகச் சிறிய அளவில் இடம் பெற்றது. இரு வல்லரசுகளின் அதிபர்களும் அவர்களது மனைவிகளும் கிரெம்லினில் ஆயிரக்கணக்கான குழந்தைகள் கொண்டாடிய புத்தாண்டு விழாவில் கலந்து கொண்டதுதான் அது.

குழந்தைகளைப் பேச விட்டிருந்தால் அவர்கள் அத்தலைவர்களிடம் "அணு ஆயுதங்களைக் கொஞ்சம் தானே குறைத்துக் கொண்டீர்கள். ஏன் முழுமையாகக் குறைத்துக் கொள்ளவில்லை என்ற கேள்வியைக் கேட்டிருப்பார்கள்.

அமெரிக்க அதிபர் அந்த ஒப்பந்தத்தைப் பாராட்டி ஆயுதக் களைப்பு மனிதத் தன்மைக்கு புதிய நம்பிக்கையை அளிக்கிறது என்றார். ரஷ்ய அதிபர் அது உலகப் பாதுகாப்பிற்கு உறுதிமொழி அளிக்கிறது என்றார்.

உலகம் இதற்கும் மேலாக இரு வல்லரசுகளிடமிருந்தும் முழு ஆயுதக் களைப்பையும் உலகில் நிரந்திர அமைதியையும் எதிர்பார்க்கிறது.

அடுத்த பத்து ஆண்டுகளுக்குள் முயன்று வரும் புதிய நூற்றாண்டை அமைதி நூற்றாண்டாக மாற்ற யாவரும் முயல்வோம்.

மதிமுகம்: 92 ஏப்ரல் 1993 புன்னகை: 4

தனிப்பிரதி: ரூ. 4-00 வருட சந்தா: ரூ. 48-00



# இரு புதிய நாடுகள்

இந்த ஆண்டு பிறப்பதற்குச் சற்று முன் அதாவது 1992 டிசம்பர் 31 நள்ளிரவில் 12 மணி அடித்தபோது பிராக்கிலும் ப்ராடிஸ்லாவாவிலும் செக், ஸ்லவாக்கியா என்ற இரு புதிய நாடுகள் தோன்றின. இந்த இரு குடியரசுகள் தோன்றியதால் பழைய செக்கோஸ்லோகியா என்ற நாடு மறைந்து போயிற்று. இதற்கு இருபது நாட்களுக்குப் பின் இந்த இருபுதிய நாடுகளும் ஐக்கிய நாடுகள் ஸ்தாபனத்தின் உறுப்பினர்களாகி ஐநாவின் மொத்த உறுப்பு நாடுகளின் எண்ணிக்கையை 180க்கு உயர்த்திவிட்டன.

ஆஸ்டிரியா சாம்ராஜ்யம் 1919 வீழ்ச்சியுற்றதும் செக்கோஸ்லவாகியா நாடு உருவானது. ஆஸ்டிரியாவின் கீழ் இருந்த பொஹீமியா மோராமியா, சைலீஷியா, ரூதேஸீயாவின் சில பகுதிகள் சேர்ந்துதான் செக்கோஸ்லவாகியா உருவாகியது. தாம ஸ்யாரி மஜாரிக், எட்வர்ட் ஜேன்ஸ் ஆகியோர் தலைமையில் இது நடந்தது. மஜாரிக் இதன்முதல் தலைவரானார். 1935 வரை இவர் அப்பதவியை வகிக்க , அதன்பின் ஜேன்ஸ் தலைவரானார்.

அப்போது சர்வாதிகாரி ஹிட்லர் 1939ல் சுடட்லாண்டு பகுதியைக் கைப்பற்றி அடுத்த ஆண்டில் போலண்டைத் தன் ஆதிக்கத்தின் கீழ் கொண்டு வந்து இரண்டாவது உலகப் போருக்கு வித்திட்டார். செக்கேஸ்லாவியாவை அடுத்து கைப்பற்றினார். ஜேன்ஸ் லண்டனுக்குப்போய் தம்நாட்டு மந்திரி சபையை அங்கு அமைத்தார்.

ஜெர்மனி 1945ல் நேச நாடுகளிடம் தோற்றது. செக்கோஸ்லாவியா சோவியத் ரஷ்யாவின் கீழ் வந்தது. 1948ல் இந்நாடு கம்யூனிஸ்ட் ஆட்சிக்கு உள்ளாகியது. போரினால் சீர்குலைந்துபோன இந்நாட்டின் பொருளாதாரத்




தைச் சீர்திருத்த மக்கள் துடித்தனர். 1968ல் அலெக்ஷாண்டர் ட்யூபெக் ஆட்சித் தலைவராகி கடும் நடவடிக்கைகளை எடுத்தார். இவற்றை சோவியத் ரஷ்யா அங்கீகரிக்கவில்லை. இதற்குப்பின் வார்சா ஒப்பந்தப் படைகள் ரஷ்யாவின் தலைமையில் இந்நாட்டை ஆக்கிரமித்துப் பல மாறுதல்களைச் செய்தன.

இந்நாட்டின் மக்களில் மூன்றில் இரண்டு பங்கு செக்கள், மீதம் ஸ்லவாக், ஜெர்மன், போலண்டு ஹங்கேரி ஆகிய பகுதியினர் இவர்களுக்குத் தம்மை பெரும்பான்மையினரான 'செக்' ஆள்வது பிடிக்கவில்லை. அதனால் பிரிந்து போக விரும்பினார்கள். ஸ்லவாக் தான் சுதந்திரநாடு என்று 1992 ஜூலை 17-ல் ஆறிவித்தது. இதற்காக செக்கோஸ்லாவாகியா அரசியல் சட்டத்தைத் திருத்திய பின் செக்கோஸ்லாவாகியா இரு நாடுகளாகியது.

பிரேக்கிலிருந்தும் ப்ராட்டிஸ் லோவாவிலிருந்தும் 1993 ஜனவரி 15ல் அந்நாடுகளில் அயல் விவகார அமைச்சர்கள் நியூயார்க் போய் ஐ.நாவில் உறுப்பினர்களாக மனுக் கொடுத்தார்கள். அந்நாடுகள் உறுப்பினர்களாகி மனித உரிமைகளுக்கும், சுதந்திரத்திற்கும் பாடுபடுவதாக உறுதி கூறின.



# தேங்காய் விவகாரம்

சத்திரக்குடி என்ற ஊரில் சாந்தப்பா என்ற விவசாயி இருந்தார். அவர் விவசாயத்தோடு இலக்கியப்பணியிலும் ஈடுபட்டவர். அவர் எழுதிய நூல்களை பாராட்டி இராமாபுரம் ஜமீன்தாரர் அவருக்குப் பரிசுகள் அளித்தும் வந்தார்.

சாந்தப்பாவின் மகன் கண்ணப்பன். அவனும் பட்டணம் போய் நன்கு படித்து விட்டு வந்து தன் தந்தைக்கு உதவியாக விவசாயத்திலும் இலக்கியத்துறையிலும் இருந்து வந்தான். ஒருமுறை சாந்தப்பா தம் மகனிடம் "இரண்டு நாட்களுக்கு முன் ஜமீன்தாரரைப் பார்த்தேன். அவர் என்னிடம் மூன்று நாட்களில் வள்ளித்திருமணத்தைக் காவியமாக எழுதிக் கொடுக்க முடியுமா எனக்கேட்டார். நானும் முடியும் எனக்கூறிவிட்டு வந்தேன். இரண்டு நாட்களில் எழுதியும் முடித்து விட்டேன். நீ இதை எடுத்துப்போய் ஜமீன்தாரருக்குப் படித்துக்காட்டு அவர் பாராட்டிப் பரிசளிப்பதை வாங்கி வா" என்று கூறி அனுப்பினார்.

கண்ணப்பனும் அந்த நூலை எடுத்துக் கொண்டு இராமாபுரத்திற்குக் கிளம்பினான். அவன் தன் ஊர் எல்லையைத் தாண்டுமுன் ஒருவன் வந்து "நீ சாந்தப்பாவின் மகன்தானே. என்னைத் தெரிகிறதா? நான்தான் முருகப்பன். உன்னைச் சிறு குழந்தையிலிருந்து அறிவேன். நீ இராமாபுரத்திற்கா போய்க் கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டான்.

கண்ணப்பனும் "ஆமாம். உங்களை நான் அதிகமாக அறியாவிட்டாலும் சில தடவைகள் பார்த்திருக்கிறேன்" என்றான். அவனும்

—சிவனார் செல்வன்—




"எனக்கு உன்னால் ஒருவேலை ஆக வேண்டும். இந்த ஊரில் நான் எதைச் சொன்னாலும் யாரும் சரியாகச் செய்வதே இல்லை. நீயாவது செய்வாயா?" என்று கேட்டான்.

கண்ணப்பனும் "என் சக்திக்கு உட்பட்டதாக இருந்தால் தாராள மாகச் செய்கிறேன்" என்றான். முருகப்பனும் "உன்னால் முடியும், நாளைக்கு நான் இந்த ஊர் பிள்ளையாருக்குத் தேங்காய் உடைக்க வேண்டும். ஒரு நல்ல தேங்காயாகப் பார்த்து வாங்கிக் கொண்டு வருவாயா?" என்று கேட்டான்.

கண்ணப்பனும் "பூ! இவ்வளவு தானா? கண்டிப்பாக வாங்கி வருகிறேன்" எனவே முருகப்பனும் "மறந்து விடமாட்டாயே. உன்னை நம்பிக் கொண்டு இருக்கலாமா?" எனவே கண்ணப்பனும் "ஓ! மறக்கவே மாட்டேன். நாளைக்குக் காலையில் தேங்காயை உங்களிடம் கொடுக்கிறேன்" எனக்கூறி விட்டுப் போனான்.

கண்ணப்பன் இராமாபுரம் போய் ஜமீன்தாரரைக் கண்டுதன் தந்தை எழுதிய வள்ளித் திருமண நூலைப்படித்துக் காட்டினான். ஜமீன்தாரரும் "உன் தந்தை இரண்டே நாட்களில் எழுதி முடித்து விட்டாரே. ஆச்சரியமாக இருக்கிறதே" என்றார். கண்ணப்பனும் "அதை விட ஆச்சரியம் இதிலுள்ள சில பாடல்களுக்குப் பல விதமாயும் பொருள் கூறலாம்" எனக்கூறி விளக்கினான்.

அதைக்கேட்ட ஜமீன்தாரர் "பேஷ் நீயும் நிறையப் படித்திருக்கிறாய் போலிருக்கிறதே. என்னுடன் நான்கு நாட்கள் இருந்து இலக்கிய சம்பந்தமாய் உரையாடி விட்டுப் போகலாம்" என்றார். அப்போது கண்ணப்பனுக்குதான் முருகப்பனுக்குக் கொடுத்த வாக்கு நினைவிற்கு வந்தது. அதை ஜமீன்தாரரிடம் சொல்வது சரியல்ல என நினைத்து அவன் "ஊரில் என் பாட்டிக்கு உடம்பு சரியாக இல்லை. என் கையிலிருந்து மருந்தை வாங்

கிச் சாப்பட்டால்தான் அவளுக்கு திருப்தி ஏற்படும். அதனால் நான் இன்றே புறப்பட்டாக வேண்டும். என்னை மன்னியுங்கள். பாட்டியின் உடல் தேறியதும் நான் இங்கு வந்து நீங்கள் விரும்பும் வரை இங்கே இருக்கிறேன்'' என்றான்.

ஜமீன்தாரரும் ''சரி. அப்படியே செய். உன் தந்தைக்குப் பரிசாகப் பத்தாயிரம் ரூபாய் கொடுக்கிறேன்'' எனக்கூறிப் பணத்தையும் அளித்தார். கண்ணப்பனும் அந்தப் பணத்தை வாங்கி பத்திரமாக வைத்தான். அதற்குப்பின் அவன் முருகப்பனுக்குக் கொடுக்க தேங்காய் வாங்க கடைத்தெருவிற்குச் சென்றான்.

அவனுக்கு எந்தக் கடையிலும் தேங்காய் கிடைக்கவில்லை. ஏனென்றால் அன்று காலை அவ்வூரின் பிரபல தேங்காய் வியாபாரி இறந்து விட்டானாம். அவனுக்கு மரியாதை செய்யும் பொருட்டுத் தேங்காய் கடைகளையும் மூடி தேங்காயை விற்கவும் கூடாது என வியாபாரிகள் சங்கம் முடிவு செய்தனராம். அதனால்தான் கண்ணப்பனுக்கு ஒரு தேங்காய் கூடக் கிடைக்கவில்லை.

அவன் சற்று யோசித்து ஜமீன்தாரரின் மாளிகைக்குப் போய் சமையல் கட்டிற்குச் சென்றான். அங்கு சமையல் காரனிடம் அவன் ''இன்று இந்த ஊரில் தேங்காயே கிடைக்கவில்லை. நான் இன்றே ஊருக்குப் போயாக வேண்டும்.





எனக்கு அவசரமாக இரண்டு தேங்காய்கள் தேவைப்படுகின்றன. இங்கே நிறைய இருக்குமே. இரண்டு காய்கள் கொடுக்க முடியுமா?" என்று கேட்டான். சமையல்காரனும் "இரண்டு என்ன பத்து காய்கள் கூடக் கொடுக்கிறேன். ஆனால் ஜமீன்தாரரின் உத்தரவு வேண்டும் அவர் அனுமதி இல்லாமல் ஒரு துரும்பைக் கூடக் கொடுக்க முடியாது" என்று கூறினான்.

கண்ணப்பன் என்ன செய்வான்? ஜமீன்தாரரிடம் இந்த அற்ப விஷயத்தைக் கூறி அனுமதி பெற்றுத் தேங்காயை எடுத்துச் செல்ல வேண்டும். வேறு வழி இல்லை. அதனால் அவன் போய் ஜமீன்தாரரைக் கண்டான். அவன் அவரிடம் தான் வந்த நோக்கத்தை எப்படிக் கூறுவது என்று யோசித்துச் சற்றுத் தயங்கி நின்றான்.

அவனது தயக்கத்தைக் கண்ட ஜமீன்தாரரும் "என்ன விஷயம்? ஏதோ நீ என்னிடம் கேட்க நினைத்துத் தயங்கி நிற்பது போலத் தெரிகிறதே" என்று கேட்டார். கண்ணப்பனும் அசட்டுச் சிரிப்பு சிரித்தவாறே "ஒன்றுமில்லை. ஒரு சாதாரண விஷயம்தான். இன்று கடைத்தெருவில் தேங்காய் வாங்கப் போனேன். அங்கு ஒரு காய்கூடக் கிடைக்கவில்லை. காரணம் கடையடைப்பு. அதனால் தங்கள் சமையல் கட்டிலிருந்து இரண்டு தேங்காய்கள் கொடுக்கச் சொல்லி சமையல்காரனுக்கு உத்திரவிட வேண்டும்" என்று வேண்டினான்.

ஜமீன்தாரரும் "இரண்டென்ன? நான்காக எடுத்துப்போ" எனக் கூறி சமையல்காரனை அழைத்து கண்ணப்பனுக்கு நான்கு தேங்காய்கள் கொடுக்குமாறு கட்டளை இட்டார். அவனும் நான்கு தேங்காய்களை கொடுக்கவே கண்ணப்பன் அவற்றை எடுத்துக் கொண்டு ஜமீன்தாரரிடம் விடைபெற்றுக் கொண்டு தன் ஊருக்குக்க கிளம்பினான்.

ஊரில் தன் வீட்டை அடைந்

ததும் அவன் ஜமீன்தாரர் கொடுத்த பணத்தைத் தன் தந்தையிடம் கொடுத்தான். சாந்தப்பாவும் "அடே யப்பா! பத்தாயிரம் ரூபாயா கொடுத்தார்?" என்று ஆச்சரியப் பட்டுக் கேட்கவே கண்ணப்பனும் "அது மட்டுமல்ல. நான் உங்கள் செய்யுள்களுக்கு விளக்கம் கூறியது கேட்டு அவர் என்னை நானகு நாட்கள் தங்கி இலக்கிய சம்மந்த மாய் பேசலாம் எனக்கூறினார். நான்தான் இந்தத் தேங்காய்களை நாளை முருகப்பனுக்குக் கொடுப் பதாக வாக்களித்துவிட்டேன் என எண்ணி உடனே திரும்பிவிட்டேன்" என்ற கூறி அந்தத் தேங்காய் களைக் கொண்டு வர எப்படி சிரமப்பட வேண்டி வந்தது என்ப தையும் சொன்னான்.

அதைக்கேட்ட சாந்தப்பா "அந் தப் பைத்தியம் முருகப்பனின் பேச்சைக் கேட்டா உனக்கு வந்த நல்ல வாய்ப்பை இழந்து விட்டாய்? அவன் தான் சொன்னதை அப் போதே மறந்திருப்பான். நீ மனிதர் களின் தராதரத்தைத் தெரிந்து நடக்கக் கற்றுக் கொள்ள வேண் டும். எதை முதலில் செய்ய வேண் டும் என்பதை யோசித்துச் செய்ய வேண்டும். ஜமீன்தாரருடன் இலக் கியம் பற்றிப் பேசிக் கொண்டிருப் பதைவிட இந்தத் தேங்காய்களைக் கொண்டு போய் முருகப்பனுக்குக் கொடுப்பது ஒன்றும் அவ்வளவு முக்கியமல்ல" என்றார்.

கண்ணப்பன் தன் தந்தை கூறி



யது பற்றி யோசித்தவாறே மறு நாள் முருகப்பனின் வீட்டிற்குப் போனான். ஆனால் அங்கு கதவு பூட்டப்பட்டிருப்பது கண்டு பிள்ளையார் கோவிலுக்குப் போய் அதன் அர்ச்சகரிடம் "இங்கே முருகப்பன் வந்தானா? அவன் பிள்ளையாருக்குத் தேங்காய் உடைக்க என்னிடம் காய் கேட்டிருந்தான்" என்றான்.

அர்ச்சகரும் "யார்? அந்தப் பைத்தியக்கார முருகப்பனா? அவன் பேச்சைக் கேட்டா வந்தாய்? அவன் இப்போது ஒன்று சொல்வான் அதை அடுத்த நிமிடமே மறந்து விடுவானே" என்றார். கண்ணப்பன் பதில் பேசாமல் திரும்பிப் போனான்.

இரண்டு நாட்கள் கண்ணப்பன் முருகப்பனின் வீட்டிற்குச் சென்ற போதிலும் அவன் வீடு பூட்டப்பட்டிருப்பதையே கண்டான். முடிவில் நான்காவது நாள் மாலை கண்ணப்பனால் அவனைக் காண முடிந்தது. அவனைக் கண்டு கண்ணப்பன் "இதோ தேங்காய் நான்..." என்று சொல்லும்போதே முருகப்பன் குறுக்கிட்டு "இந்த ஊரில் என் பேச்சை யாருமே கேட்பதில்லை. நீ இராமாபுரம் போகப் போகிறாயா? போனால் எனக்கு இஞ்சி லேகியம் வாங்கி வருவாயா? மறக்க மாட்டாயே" என்றான்.

அதுகேட்டுக் கண்ணப்பன் "இவன் தேங்காயைப் பற்றி மறந்தே விட்டானே. என் தகப்பனார் கூறியது அனுபவபூர்வமான வார்த்தை. மனிதனின் தராதரம் அறிந்து வேலை செய்ய வேண்டும். எதை முதலில் செய்ய வேண்டும் என்பதை நன்கு யோசிக்க வேண்டும். முருக்ப்பன் கூறியதை நம்பி அரிய வாய்ப்பை இழந்து விட்டேன். இனி எச்சரிக்கையாக இருப்பேன். தேங்காய் விவகாரம் போல மறுபடியும் மாட்டிக்கொள்ள மாட்டேன்" என நினைத்துக்கொண்டு தன் வீட்டிற்குச் சென்றுவிட்டான்.






[மாயமாளிகையிலிருந்து தப்பிய மகேந்திரனும் இளவரசி வித்தியாவதியும் மலை அடிவாரத்தில் உள்ள முனிவரின் குடிலை அடைந்தனர். அவர்களைக் கண்டு மகிழ்ந்த முனிவர் தம்மை பற்றிய விவரங்களைக் கூறினார். அவர் தன் சிற்றப்பா ஜிதேந்தரர் என மகேந்திரன் தெரிந்து கொண்டான். மூவரும் தலைநகருக்குச் சென்றார்கள். பிறகு—]

**த**ன் மகள் காணாமல் போய் இரண்டு வாரங்களுக்கு மேலாகியும் எவ்விதத் தகவலும் தெரியாததால் மன்னன் அரசாங்க சோதிடர் வாசஸ்பதியை அழைத்து "இப்போது இளவரசியின் ஜாதகப்படி கிரக நிலை எப்படி உள்ளது? பாருங்கள்" என்று கேட்டான்.

வாசஸ்பதியும் ஜாதகத்தைப் பார்த்துவிட்டு "இப்போது கிரகங்கள் அனுகூலமாகவே உள்ளன. அநேகமாக அரசகுமாரி இப்போது தலைநகருக்குள் வந்திருக்க வேண்டும்" என்றார். மன்னனும் அரசியும் "அப்படியா! இது மகிழ்ச்சி தரும் செய்தியே" என்று கூறினார்கள்.

அப்போது ஒரு காவலாளி



வந்து மன்னனை வணங்கி "அரசே! அரண்மனை வாசலில் ஒரு பல்லக்கு வந்துள்ளது. அதனுடன் மூன்று குதிரை வீரர்களும் வந் திருக்கிறார்கள். அவர்களில் ஒரு வன் தங்களது பேட்டிக்காகக் காத் திருக்கிறான்" என்று தெரிவித் தான். மன்னனும் "அப்படியா? யார் அவன்? தன் பெயர் என்ன என்று சொன்னானா?" என்று கேட்டான்.

காவலாளியும் "இல்லை அரசே! ஆனால் பார்ப்பதற்கு அவன் ஒரு இளவரசன் போலத் தென்படு கிறான்" என்றான். மன்னனும் "சரி, பல்லக்குள் யார் இருக்கிறார் கள்?" என்று கேட்கவே அக்காவ லாளியும் "அது தெரியவில்லை. மூடுபல்லக்கு அது. திரைச்சீலை யால் மறைக்கப்பட்டிருக்கிறது" என்றான்.

அப்போது ராணி வஜ்ஜிரேஸ் வரி "பல்லக்கினுள் நம் மகள் தான் இருக்கிறாளோ என்னவோ?" என ஆவலுடன் கேட்டாள். அப் போது மன்னன் "நம் மகள் வந்தி ருந்தால் அவள் இவ்வளவு நேரம் வரை பல்லக்கினுள் உட்கார்ந் திருக்க மாட்டாள். இறங்கி ஓடி வந்து நம்மைப் பார்த்திருப்பாளே. நாம் போய்ப் பார்க்கலாம்" என்றான்.

அரசியும், சோதிடரும் சேனாதி பதி உக்கிரசேனனும் மன்னனுடன் சென்றார்கள். அவர்கள் அரண் மனை வாசலுக்கு வந்தபோது பல்லக்கின் பக்கம் நின்ற ஒருவன் வந்து மன்னனை வணங்கி "அரசே! நான் இமகிரியை ஆண்ட திரிலோக பதியின் பேரன், உமாபதி அதன் மன்னரானதும் என் தந்தை கஜ பதியும், நானும் இமகிரியை விட்டு ஓடி வர வேண்டியதாயிற்று. என் பெயர் ஜகத்பதி" என்றான்.

வாசஸ்பதி அவனை உற்றுப் பார்த்து "நீ ஜகன்நாதன் தானே! இப்போது ஜகத்பதி என்று சொல் லிக் கொள்கிறாயா?" என்றார். அப்போது உக்கிரசேனன் சட்டென அவன் பக்கம் போய் அவனது ஒரு கையை பலமாகப் பிடித்துக்

கொண்டான்.

அப்போது அவன் "நான் உங்களுக்கு ஒரு நற்செய்தி கொண்டு வந்திருக்கிறேன். தங்களது மகளைக் காப்பாற்றி இந்தப் பல்லக்கில் கொண்டு வந்திருக்கிறேன்" என்றான். ராணியும் "என் மகள் இந்தப் பல்லக்கினுள் இருக்கிறாளா?" என்று ஆவலுடன் கூறி பல்லக்கை நோக்கிப் போகலானாள்.

மன்னன் அவளைத் தடுத்து "இதோ பார்! பல்லக்கில் இருப்பது வித்தியாவதியானால், இப்போதே இறங்கி வந்திருப்பாளே. அவளுக்கு உடல்நலமில்லையா?" என்று ஜகத்பதியைப் பார்த்துக் கேட்டான்.

ஜகத்பதியும் "அவள் நலமாகவே இருக்கிறாள். இப்போதே அவளை பல்லக்கிலிருந்து வெளியே வரச் சொல்கிறேன்" எனக் கூறிவிட்டு அவன் பல்லக்கினருகே சென்றான். அவன் பல்லக்கின் திரைச் சீலையை ஒருபுறமாகத் தள்ளி "அரசகுமாரியே! உன் பெற்றோர்கள் உன்னை எதிர்பார்த்து நிற்கிறார்கள். வெளியே வா" என்று கூறினான்.

பல்லக்கினுள்ளிருந்த மாலினி அதைக் கேட்டு திடுக்கிட்டாள். தன்னை இளவரசி எனக்கூறி வெளியே வரச் சொன்னது அவளுக்கு ஆச்சரியத்தை அளித்




தது. அவள் 'திரு' 'திரு' வென்று விழித்தவாறே பல்லக்கிலிருந்து இறங்கினாள். மெதுவாக அவள் நடந்து மன்னன் நின்ற இடத்திற்குப் போகலானாள்.

பார்ப்பதற்கு வித்தியாவதி போல இருந்தாலும் அவள் தம் மகளல்ல என்பது மன்னனுக்கும் ராணிக்கும் தெரிந்து போயிற்று. உக்கிரசேனன் ஜகத்பதியைப் பார்த்து "நீ ஏமாந்து விட்டாய். இவள் அரசகுமாரி வித்தியாவதியே அல்ல" என்றான். ஜகத்பதியோ "இவள் இளவரசி வித்தியாவதிதான். இதில் சந்தேகமே இல்லை" என்றான். உக்கிரசேனன் "இது உனக்கு எப்படித்



தெரியும்?'' என்று கேட்டான்.

''நான்தான் இவளை வசந்த மாளிகையிலிருந்து கவர்ந்து வரச் சொல்லி மாயமாளிகையில் தக்கப் பாதுகாப்புடன் வைத்திருந்தேன். இதற்கு முன் அவளது கிரக நிலை சரியாக இல்லை. இப்போது சரியாகிவிட்டதால் தங்களிடம் ஒப்படைக்க அழைத்து வந்தேன்'' என்றான்.

வாசஸ்பதி அவனருகே ''இதற்காகத்தான் ஜகன்நாதனாக என்னிடம் வந்தாயா?'' என்று கேட்டார். உக்கிரசேனனும் ''அடே சதிகாரா! நீதான் அரசகுமாரியைக் கவர்ந்து சென்றவனா? இப்போது யாரைக் கொண்டு வந்து நிறுத்தி அரசகுமாரி என்று எங்களை நம்ப வைக்கப் பார்க்கிறாய்? உன்னை விடப் போவதில்லை'' என்று அவன் கையை இறுகப்பிடித்துக் கொண்டான்.

ஆனால் சட்டென ஜகத்பதி திமிறித் தன்னை விடுவித்துக் கொண்டுத் தன் கழுத்தில் அணிந்திருந்த மாலையிலிருந்த தாயத்தைப் பிடித்து அழுத்தினான். மறுநிமிடமே பளிச்சென மின்னல் மின்னியது. அப்பகுதி முழுவதும் புகை சூழ்ந்தது. ஜகத்பதி தப்பி ஓடலானான்.

அதேசமயம் அங்கு முனிவருடனும் இளவரசியுடனும் வந்து கொண்டிருந்த மகேந்திரன் யாரோ ஒருவன் ஓடி வருவது கண்டு அவனைப் பிடித்து தள்ளினான். ஜகத்பதி கீழே விழ அவனது தலைப்பாகையும் உருண்டு விழுந்தது மகேந்திரன் ஜகத்பதியின் கையிலிருந்த மாலையைத் தன் கையில் எடுத்துக் கொண்டான்.

அவன் ஜகத்பதியைப் பார்த்து ''இனி உன் மந்திர தந்திரங்கள் எதுவும் பலிக்காது'' என்றான். இதற்குள் உக்கிரசேனன் ஓடிவந்து ஜகத்பதியைப் பிடித்து சில வீரர்களிடம் ஒப்படைத்து ''இவனைச் சிறையில் தள்ளுங்கள்'' என்றான். பிறகு அவன் திரும்பிப் பார்த்து ''ஆ! மகேந்திரா! நீயா? வந்துவிட்டாயா? இளவரசி எங்கே



இருக்கிறாள் என்று கண்டுபிடித்து விட்டாயா?'' என்று கேட்டான்.

அப்போது இளவரசி வித்தியாவதி ''இதோ இருக்கிறேனே'' எனக்கூறிக் கொண்டு தன் தாயினருகே போய் நின்றாள். மன்னனும் ராணியும் அவளை அடையாளம் கண்டுகொண்டு ''என்னம்மா இது? ஏன் இந்தச் சன்னியாசி வேஷம்?'' என்று கேட்டார்கள்.

இதேசமயம் மாலினி ஓடி வந்து இளவரசியை வணங்கி ''என்னை ஏன் இளவரசி என இங்கு அழைத்து வந்தார்கள் என்பதுதான் எனக்குப் புரியவில்லை'' என்றாள். வித்தியாவதியும் ''எனக்கு அதன் காரணம் தெரியும். நீ கவலைப்படாதே. உனக்கு எந்த ஆபத்தும் நேராது'' என்று தேற்றினாள்.

அப்போது மகேந்திரன் மன்னனை வணங்கி ''அரசே! நான் மேற்கொண்ட பணியை வெற்றிகரமாக முடித்து விட்டேன். இளவரசியைத் தேடிக் கண்டுபிடித்து அழைத்து வந்து தங்களிடம் ஒப்படைத்ததில் நான் பெரும் மகிழ்ச்சி அடைகிறேன். இந்த வேலை நல்ல விதமாக முடிய அதிர்ஷ்டவசமாக எனக்கு வழியில் ஒரு முனிவரது உதவி கிடைத்தது'' என்று கூறித் தன்னருகே நின்று புன்னகை புரிந்து கொண்டிருக்கும் முனிவரைக் காட்டினான்.

மன்னனும் ஆச்சரியத்தோடு அவரைப் பார்த்தவாறே ''அப்படியா! வணக்கம்'' என்று பணிவுடன் அவரை வணங்கினான். மகேந்திரனும் ''இவர் என் சிற்றப்பா என்பது இப்போதுதான் தெரிந்தது. இவர் மகிமைபுரி அரச வம்சத்தை சேர்ந்தவர். ஜிதேந்திரர் என்பது இவரது பெயர். இப்போது துறவறம் மேற்கொண்டிருக்கிறார்'' என்றான்.

வீரபுர மன்னனும் ''ஓ! நான் வீரேந்திரரைக் கோவிலில் சுவாமி தரிசனம் செய்ய வந்த போது பார்த்திருக்கிறேன். அவர் எதிரிகளிடம் அகப்பட்டு இறந்து போனார் என்று கேள்விப்பட்டேன். இது உண்மையா?'' என்று கேட்டான்.

ஜிதேந்திரனும் ''என் தமையன் சுரேந்திரன் எதிரிகளுடன் போர் புரிந்து இறந்து போனார். அப்போது குழந்தையாக இருந்த அவரது மகன் மகேந்திரனையும் அவரது மனைவியையும் நான் அழைத்துக் கொண்டு மகிமைபுரியிலிருந்து வெளியேறி இந்த வீரபுரத்திற்கு வந்தேன். அதற்குப்பின் நான் சன்னியாசியாகிக் காட்டிற்குச் சென்றுவிட்டேன். தாங்கள் கேள்விப்பட்டது உண்மையே. என் மூத்த தமையன் வீரேந்திரர் ஆட்சிப் பொறுப்பை என் மற்ற தமையனரான சுரேந்திரனிடம் ஒப்படைத்துப் புனித யாத்திரரைக்குச் சென்ற போதுதான் எதிரி மகிமைபுரிமீது படை எடுத்து வந்தான். அப்போரில் சுரேந்திரன் இறக்க புனித யாத்திரையிலிருந்து திரும்பி வந்த வீரேந்திரரை எதிரிகள் எளிதில் பிடித்துக் கொன்று விட்டார்கள்'' என்றார்.

மன்னனும் ராணியும் முனிவர் கூறியதை ஆவலுடன் கேட்டுக் கொண்டிருக்கவே அவர் ''நான் இங்கு வர இரு நோக்கங்கள் உள்ளன. மகேந்திரன் யார் என்பதைத் தங்களுக்குத் தெரிவிப்பது ஒன்று. மற்றது மகேந்திரனையும் அவனது தாயாரையும் இவ்வூரில் தவிக்க விட்டுவிட்டு அவர்களிடம் சொல்லிக் கொள்ளாமல் காட்டிற்குப் போய் விட்டதற்காக மகேந்திரனின் தாயாரிடம் மன்னிப்புக் கோருவது. இதைச் செய்து விட்டு நான் மீண்டும் காட்டிற்குப் போய் சன்னியாச வாழ்க்கை வாழ விரும்புகிறேன்'' என்றார்.



அப்போது உக்கிரசேனன் ''நீங்கள் மகேந்திரனின் தாயாரைப் பார்க்க இங்கிருந்து போக வேண்டாம். அவள் எங்கள் பராமரிப்பில்தான் இருக்கிறாள். இப்போதே அழைத்து வரச் செய்கிறேன்'' என்று கூறிச் சில வீரர்களைக் கூப்பிட்டான்.

அப்போது மகேந்திரன் ''நானே போய் என் தாயாரை அழைத்து வர எனக்கு அனுமதி அளிக்க வேண்டும்'' எனவே மன்னனும் அவ

னோடு சில வீரர்களை அனுப்பி மகேந்திரனின் தாயாரை மரியாதையுடன் அழைத்து வருமாறு கூறினார்.

ராணி வஜ்ஜிரேஸ்வரி தன் கணவனிடம் "மகேந்திரன் அரச குடும்பத்தில் பிறந்தவன்தானே வித்தியாவதியைத் தேடிக் கண்டு பிடித்து அழைத்தும் வந்திருக்கிறான். இவன் நம் மகளை மணக்கத் தக்கவன். நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?" என்று கேட்டாள்.

மன்னனும் "பொருத்தமான ஜோடிதான். எனக்கு எவ்வித ஆட்சேபணையும் இல்லை. வித்யா! நீ உன் தாயார் சொன்னதைக் கேட்டாயே. உன் அபிப்பிராயம் என்ன?" என்று கேட்டான். வித்தியாவதியும் புன்னகை புரிந்து தலையை அசைத்தவாறே வெட்கி மௌனமாகி நின்றாள்.

மன்னன் சோதிடர் வாசஸ்பதியை கலந்து ஆலோசிக்க அவரும் "ஆகா! இந்தத் திருமணத்தை தாராளமாக நடத்தலாம்" என்றார். மன்னனும் "சரி, எல்லோரும் உள்ளே போவோம். மகேந்திரனும் அவன் தாயாரும் வந்து விடட்டும். பிறகு எல்லாம் பேசி நிச்சயிக்கலாம்" என்றான். ராணி வித்தியாவதியையும் மாலினியையும் அழைத்துக் கொண்டு முன் செல்ல மற்றவர்களும் அரண்மனைக்குள் சென்றனர்.

மகேந்திரனும் அவனது தாயாரும் வந்தனர். உக்கிரசேனன் மகேந்திரனைப் பார்த்து "நீ சுத்த வீரன். துணிச்சல் கொண்டவன். அரசகுடும்பத்தினன். இளைஞன். அழகன், எல்லாவிதத்திலும் வித்தியாவதியை மணக்கத் தகுதி பெற்றவள். உன்னைப் பற்றி நான் மிகவும் பெருமைப்படுகிறேன்" என்றான்.

விரைவிலேயே ஒரு நல்ல முகூர்த்தத்தில் வித்தியாவதிக்கும் மகேந்திரனுக்கும் விமரிசையாக விவாகம் நடைபெற்றது.

(முற்றிற்று)






# அவன் அறிவானே!

**த**ன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! இந்த பயங்கர நள்ளிரவில் நீ இப்படி சிரமப்படுவதைப் பார்த்தால் நீ உன்னைப் பற்றி ஏதோ உயர்வாக எண்ணிக் கொண்டு செயல்படுவதாகத் தெரிகிறது. இந்தக் கலைஞர்கள், ஓவியர்கள், சிற்பிகள் ஆகியோர் நிலையும் இது தான். அவர்கள் உலக ஞானமே இல்லாமல் தாம் எண்ணியதையே எண்ணிக் கொண்டு கிடைக்கும் அரிய வாய்ப்புகளை எல்லாம் நழுவ விட்டு விடுவார்கள். இதற்கு உதாரணம் கலாதாசன் என்ற சிற்பி. இந்த மாபெரும் சிற்பி

வேதாளம் சொல்லும் கதை



தனக்குக் கிடைத்த அரிய வாய்ப்பு பற்றி யோசிக்காமல் அதை உதறித் தள்ளிய கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

கிருஷ்ணகிரி மன்னன் கீர்த்தி சேனன். அவன் கலா ரசிகன். கவிகளைப் பாராட்டுபவன். தினமும் அவனது தர்பாரில் கவியரங்கம் நடக்கும். அரண்மனையில் அழகிய சிற்பச் சிலைகளும் ஓவியங்களும் ஆங்காங்கு இருக்கும்.

கீர்த்திசேனன் கலை அழகு நிரம்பிய ஒரு கல் மண்டபத்தை அமைக்க நினைத்தான். அதை எங்கு எப்படி நிர்மாணிக்கலாம் என யோசித்துக் கொண்டிருக்கும் போது அவன் கலாதாசன் என்ற சிற்பியைச் சந்தித்தான். அது ஒரு கிராமம். அவன் பண ஆசை கொண்டு தன் கலைக்கு விலை பேசுவதை விரும்பாமல் அந்த கிராமத்திலேயே இருந்து வந்தான். ஆனால் அவனது புகழ் எங்கும் பரவி இருந்தது.

கீர்த்திசேனன் அவனை ஆஸ்தான சிற்பியாக்கிக் கல் மண்டப வேலையை அவனிடம் ஒப்படைக்கத் தீர்மானித்தான். எனவே தலைநகருக்குப் போனதும் சில அதிகாரிகளை அனுப்பித் தன் எண்ணத்தை அவனிடம் கூறி அவனை அப்பதவியை ஏற்கத் தன் தர்பாருக்கு அழைத்து வருமாறு சொல்லி அனுப்பினான்.

ஆனால் கலாதாசனோ அந்த அதிகாரிகளிடம் ''எனக்கு எந்தப் பதவியும் வேண்டாம். மன்னனின் ஆதரவும் வேண்டாம். என்னால் மன்னனின் கோரிக்கையை ஏற்க முடியாது போவதற்கு என்னை மன்னிக்கச் சொல்லுங்கள்'' என்று கூறி அவர்களை திருப்பி அனுப்பி விட்டான்.

இதைக் கேட்டதும் கீர்த்தி சேனன் தானே சென்று நேரில் கலாதாசனைக் கண்டான். அவனிடம் ''நீ திறமைமிக்க சிற்பி. உன் கலையைப் பிறருக்குத் தெரியாமல் மூடி வைக்கலாமா? கலை பொது சொத்து. அதை மூடி

மறைக்கக் கூடாது. எனவே அதை யாவரும் அறிய நீ நான் கொடுக்கும் பதவியை ஏற்க வேண்டும்'' என்றான்.

கலாதாசனும் ''சாதாரணமாக மன்னர்கள் அதிகார தோரணையில் பேசுவார்கள். எனவேதான் எனக்கு அவர்களைப் பிடிக்கவில்லை'' என்றான். கீர்த்திசேனனும் ''நீ என்னை அந்த ரகத்தில் சேர்க்க வேண்டாம். உன்னைப் போன்ற கலைஞனை நான் மன்னர்களைவிட உயர்வாக மதிக்கிறேன். உன்னை நான் வேண்டுவது சிற்பக் கலை ததும்ப நீ கல் மண்டபத்தை அமைத்துக் கொடுக்க வேண்டும் என்பதுதான்'' என்றான்.

கலாதாசனும் சற்று யோசித்துவிட்டு ''சரி அரசே! தாங்கள் கூறியபடியே நடக்கிறேன்'' என்றான். பிறகு அவன் மன்னனுடன் தலைநகருக்கு வந்தான். அங்கு தக்கதொரு இடத்தைத் தேர்ந்தெடுத்து மண்டப வேலையில் மூழ்கி விட்டான்.

ஒருநாள் இளவரசி ரத்தினமாலா அந்த மண்டப வேலை நடப்பதைக் காண வந்தாள். அங்கு செதுக்கப்பட்ட சிலைகளைக் கண்டு மலைத்து நின்றாள். அவளது பார்வை சிற்றுளியும் கையுமாய் இருந்த கலாதாசனின் மீது விழுந்தது. அவனது அழகிய தோற்றத்தையும் முகப்பொலிவை



யும் கண்டு அவள் தேவலோகத்திலிருந்து இறங்கிய ஒரு அழகிய தேவனைப் பார்ப்பது போலப் பார்த்தாள். அவள் மணந்தால் அந்த சிற்பியையே மணப்பது என்று அப்போதே தீர்மானித்து விட்டாள்.

அன்றுமுதல் ரத்தினமாலா அவ்வப்போது மண்டப வேலை நடக்கும் இடத்திற்குப் போகலானாள். அவள் கலாதாசனுடன் சிற்பம், ஓவியம் ஆகிய நுண்கலைகளைப் பற்றி பேசலானாள். ஆனால் தன் மனதில் உள்ள விஷயத்தை மட்டும் அவனிடம் கூறவில்லை.

மண்டப வேலை முடிவடைந்



தது. மன்னன் கீர்த்திசேனன் நகரப் பிரமுகர்கள் பலரோடு வந்து மண்டபத்தைப் பார்த்து விட்டு வானளாவப் புகழ்ந்து கலாதாசனைப் பாராட்டினான். மண்டபத்தின் திறப்பு விழாவிற்கான நல்ல நாள் அன்றைக்குப் பதினைந்தாவது நாள் எனக் குறிக்கப்பட்டது. அந்த மண்டபத்தில் அன்று ராஜநர்த்தகி மாயசுந்தரியின் நடனத்திற்கும் ஏற்பாடு செய்யப்பட்டது.

இந்நிலையில் ஒருநாள் ரத்தினமாலா கலாதாசனைச் சந்தித்து தன் விருப்பத்தைக் கூறினாள். அது கேட்டு கலாதாசன் திடுக்கிட்டுப் போனான். அவன் சற்று நேரம் ஆழ்ந்து யோசித்தான். பிறகு ரத்தினமாலாவை ஊடுருவிப் பார்ப்பது போலப் பார்த்து "நீயோ இளவரசி. நானோ அரசகுடும்பத்தில் பிறக்காதவன். சாமான்னிய மனிதன் நம் திருமணம் எவ்வாறு நடக்க முடியும்" என்று கேட்டான்.

அப்போது ரத்தினமாலா "இந்த உயர் பிறப்பு, தாழ் பிறப்பு என்பது பற்றி எல்லாம் நீங்கள் கவலைப்பட வேண்டாம். நீங்கள் மாபெரும் சிற்பி. அது போதும்" என்றாள்.

அதுகேட்டுக் கலாதாசன் "சரி. நம் விவாகத்திற்கு உன் தந்தையின் அனுமதி வேண்டுமே. இன்றிலிருந்து ஒரு வாரத்திற்குள் உன் தந்தையின் இணக்கம் பெற்று வந்து என்னிடம் தெரிவி. அப்போது தான் நம் திருமணம்" என்றான். ரத்தினமாலாவும் அப்படியே செய்வதாகக் கூறிவிட்டுச் சென்றாள்.

நான்கு நாட்கள் கழிந்ததும் கலாதாசன் யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் இரவில் கிளம்பி அந்த நகரை விட்டுத் தன் கிராமத்திற்குப் போய்ச் சேர்ந்தான். அவன் ஒரு வாரம் வரை காத்திருக்கவில்லை.

வேதாளம் இக்கதையைக் கூறி "மன்னனே! கலாதாசன் இப்படி திடீரெனப் போனது அவனுக்கு உலக ஞானம் இல்லை என்பதைத் தானே குறிக்கிறது? தம் விவாகத்

திற்கு மன்னனிடம் ரத்தினமாலா அனுமதி பெற ஒரு வார காலம் அவன் அவகாசம் கொடுத்திருந் தானே. அப்படி இருக்க ஒரு வாரம் முடியும் வரை அவன் காத் திராமல் ஏன் நான்காவது நாளே தலைநகரை விட்டுப் போய்விட் டான்? அவனுக்கு உலக வாழ்வு என்ன என்று தெரியவில்லையா? இந்த கேள்விகளுக்கு விடைகள் தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் "கலாதாசனி டம் நீ கூறிய உலக அனுபவமோ, அல்லது உலக வாழ்வைப் பற்றிய எண்ணமோ இல்லாமல் போய்விட வில்லை. அவன் அதைப் பற்றி நன்கு தெரிந்திருந்தான் என்றே தெரிகிறது. அவன் மன்னனின் அனுமதி பெற இளவரசிக்கு ஒரு வாரம் அவகாசம் அளித்தது மன் னனின் மனதை அறிந்து கொள் ளத்தான். இளவரசி தன் விவா கம் பற்றித் தன் தந்தையிடம் கூற ஒரு வார காலம் எடுத்துக்கொள்ள மாட்டாள். உடனேயே அது பற்றி அவள் தன் தந்தையிடம் பேசி இருப்பாள். மன்னன் அதற்கு இணங்கி இருந்தால் இளவரசி உடனேயே வந்து கலாதாசனிடம் அதைத் தெரிவித்திருப்பாள். நான்கு நாட்களாகியும் இளவரசி வராததால் மன்னனின் அபிப்பி ராயம் என்னதாக இருக்கும் என் பதை கலாதாசன் ஊகித்து விட் டான். அவன் அதற்கு இணங்க வில்லை என்று தெளிவாகி விட்ட தால் கலாதாசன் தன் ஊருக்குச் சென்று விட்டான்'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.






# திட்டம் பலித்தது!

சந்திரன் என்ற இளைஞன் நகரில் உயர்படிப்பு முடித்துவிட்டுத் தன் கிராமத்திற்கு வந்தான். அவன் தன் தந்தையைச் சிறுவயதிலேயே இழந்தவன். ஆனால் அவன் தன் தாயின் பராமரிப்பில் வளர்ந்து பெரியவன் ஆனவன்.

அவன் தன் தாயாரிடம் இனி தான் வேலை தேடப்போவதாகக் கூறவே அவளும் ''நீ படித்த படிப்பிற்கு இந்த ஜமீனிலேயே உனக்கு நல்ல வேலை கிடைக்கும். உன்னை சிபார்சு செய்ய உன் தந்தையின் நண்பரான சிவசாமியின் உதவியை நாடு. கண்டிப்பாக உதவுவார். அவர் காட்டூரில் இருக்கிறார்'' என்றாள்.

சந்திரனும் மறுநாள் காட்டூருக்குப் போய் சிவசாமியைக் கண்டு தான் வந்த காரணத்தைக் கூறினான். அவரும் ''நீ என் நண்பனின் மகன். நன்றாகப் படித்தும் இருக்கிறாய். ஜமீன்தாரரிடம் உத்தியோகம் பெறுவது அவ்வளவு எளிதல்ல. அங்கு நந்திபோல கஜபதி என்பவன் இருக்கிறான். அவன் எதைச் சொன்னாலும் ஜமீன்தாரர் கேட்பார். அதனால் அவனைத்தான் நீ பார்க்க வேண்டும். அவன் எல்லோரும் தன்னை மதிக்க வேண்டும் என்றும் புகழ வேண்டும் என்றும் விரும்புகிறவன். அதனால் நீ போய் அவனைப்பார்த்து எப்படி நடந்து கொள்ள வேண்டுமோ நடந்து கொள்'' என்று சொல்லி அனுப்பினார்.

அதே ஊரில் சந்திரனின் நண்பன் கண்ணன் என்பவன் இருந்தான். சந்திரன்தான் வந்த வேலை பற்றி அவனிடம் கூறி ''ஜமீன்தாரரிடம் கஜபதி என்பவன் இருக்கிறானாம். அவன் சொன்

—எஸ். சோபினி—

னால் வேலை கிடைக்குமாம். அவன் ஆதரவை எப்படி அடைவது?'' என்று சொல்லி கஜபதிப் பற்றி சிவசாமி கூறியதையும் சொன்னான்.

கண்ணனும் சந்திரனும் வெகு நேரம் யோசித்து ஒரு திட்டம் தீட்டினார்கள். அதன்படி சந்திரன் காலையிலேயே ஜமீன்தாரரின் மாளிகைக்குப் போய் கஜபதியைக் காண காத்திருந்தான். உச்சி வேளைக்குத்தான் அவனால் கஜபதியைக் காண முடிந்தது.

சந்திரன் கஜபதியைப் பணிவுடன் வணங்கி தன் கல்வித் தகுதிபற்றிக் கூறி தன்னைச் சிபாரிசு செய்யுமாறு வேண்டினான். கஜபதியும் கம்பீரமாக உறுமி ''உன் மாதிரி உத்தியோகம் கேட்டு தினமும் ஆயிரம் பேர் என்னைக் காண வருகிறார்கள். எவ்வளவு பேருக்குத் தான் நான் வேலை வாங்கிக் கொடுக்க முடியும்? சரி, எதற்கும் நீ நாளைக்கு வந்து என்னைப் பார்'' என்று கூறி அனுப்பினான்.

சந்திரனும் கண்ணனின் வீட்டிற்குப் போய் கஜபதியைக் கண்டது பற்றிக் கூறினான். அவனும் ''இது நான் எதிர்பார்த்ததே. நாளை நம் கைவரிசையைக் காட்டலாம்'' என்றான்.

மறுநாள் சந்திரன் கஜபதியைக் காணச் சென்றான். அன்றும் வெகு நேரம் காத்திருந்தபின் கஜபதி



யைக் காணமுடிந்தது. அப்போது கஜபதி நான்கு பெரிய மனிதர்களோடு பேசிக் கொண்டிருந்தான். சந்திரனும் அவனுக்கு வணக்கம் செலுத்தி நின்றான்.

அப்போது திடீரெனக் கண்ணன் அந்த அறைக்குள் நுழைந்து சந்திரனிடம் ''நீ இங்கேயா இருக்கிறாய்? நான் ஜமீன்தாரரிடம் உத்தியோகம் பற்றி அவரது தோட்டக்கார துரைசாமியிடம் பேசினேன். அவன் எனக்கு வேலை வாங்கிக் கொடுப்பதாகச் சொன்னான். நீயும் அவனைப் பார். வேலை கிடைக்கலாம். இங்கே என்ன செய்கிறாய்?'' என்று கேட்டான்.

சந்திரனும் "இவர் கஜபதி. இவர் சொன்னால் ஜமீன்தாரர் கேட்பார். அதனால் இவரைக் காண வந்தேன்" என்றான். கண்ணனோ "இவர்தான் வெத்து வேட்டு கஜபதியா? இவரா உனக்கு வேலை வாங்கித் தரப்போகிறார்? நான் நம்பமாட்டேன். நீ போய் தோட்டக்கார துரைசாமியை பார். அவன் சொன்னால் ஜமீன்தாரர் கேட்பார் உனக்கு வேலையும் உடனே கிடைத்துவிடும்" என்றான்.

அப்போது கஜபதி "சந்திரன்! இவனுக்கு என் சக்தி தெரியாது. நான் சொன்னால் ஜமீன்தாரர் மறுவார்த்தை பேசமாட்டார். நீ நாளையே வந்து வேலையில் சேர். எந்தத் தோட்டக்காரனின் சிபாரிசும் என் சிபார்சைவிட மேலானது அல்ல. நீ ஒன்றும் அந்த துரைசாமியைப் பார்க்க தேவையில்லை" என்று கூறி சுற்றிலும் இருந்த பெரிய மனிதர்களைக் கம்பீரமாகப் பார்த்தான்.

அவர்களும் "ஆமாம் தம்பீ! ஐயா சொன்னால் இந்த ஜமீனில் அதற்கு மறுவார்த்தை கிடையாது. நாளை உன்னை வேலைக்கு வரச் சொல்லி விட்டார். உனக்கு வேலை கிடைத்துவிட்டது. சந்தோஷமாப் போ" என்று சந்திரனிடம் கூறினார்கள்.

சந்திரனும் எல்லோரையும் வணங்கி விட்டு கண்ணனுடன் சென்றான். கண்ணனும் "எப்படி என் நாடகம்! துரைசாமிக்கு ஏதோ சக்தி இருப்பதாகச் சொல்லி கஜபதியை ஆத்திரப்பட வைத்து உனக்கு வேலை கிடைக்கச் செய்தேன். அதற்குத்தான் சொன்னார்கள் பெரியவர்கள் ஆடிக்கறக்கிற மாட்டை ஆடிக்கறக்க வேண்டும் என்று" என்றான்

சந்திரனும் சிரித்துக் கொண்டே "ஆமாம் எப்படியோ எனக்கு வேலை கிடைத்துவிட்டது" என்றான்.





# அம்புலிமாமா அனுபந்தம்—53



நம் நாட்டுப் பறவைகளும், மிருகங்களும்:

## வண்ணக் கொக்குகள்




நம் நாட்டுக் கொக்குகளில் வண்ணக் கொக்குகள் சிறப்பானவை. ஒரு மீட்டர் உயரத்தில் பறக்கும் இக்கொக்குகளில் உடல்களில் பல வண்ணங்கள் தென்படும். இதன் முகத்தின் நிறம் இலைப்பச்சை நீண்ட அலகுகளும் அதே நிறத்தில் உள்ளவை. இறகுகளில் கருப்புப்புள்ளிகள் இருக்கும். வால் இளம் ரோஜாநிறமானது. உடலின் மீதுள்ள இறகுகளின் மேல் பகுதி வெள்ளையாக இருக்கும். அடிப்பாகத்தில் கருப்புக் கோடுகள் இருக்கும்

இந்த வண்ணக் கொக்குகள் மற்ற கொக்குகளைப் போலவே ஆழமில்லாத நீர்ப் பகுதிகளிலும், சதுப்பு நிலங்களிலும் கூட்டம் கூட்டமாகத் திரியும். ஆழமில்லாத நீர்ப் பகுதிகளில் நின்று அங்குள்ள மீன்கள், தவளைகள், நண்டுகள், நந்தைகள் முதலியவற்றைப் பிடித்துத் தின்கின்றன.

இவை நீர் நிலைகளின் அருகேயுள்ள மரங்களில் மரக்கிளைகளில் வாழ்கின்றன. பறக்கும் போது இறக்கைகளை நன்கு விரித்து ஆட்டி மெதுவாகக் கீழே இறங்குகின்றன.

குச்சிகளால் கட்டப்பட்ட இவற்றின் கூடுகள் மிகப் பெரியவை. உறுதியானவை. ஒரு மரத்தில் சுமார் இருபது கூடுகளைக் காணலாம்.

இவற்றிற்குக் குரல் குழாய் இல்லை. அதனால் இவை கத்தாமல் இருக்கும். அவ்வப்போது மெல்லிய முணுமுணுப்புகள் மட்டும் கேட்கும்.



# நம் தற்கால இலக்கியம்

பல மொழிகளையும், பல்விதப் பண்பாட்டுகளையும் கொண்ட நம் நாட்டில் ஒவ்வொரு மொழியிலும் உயரிய இலக்கியப்படைப்புகள் தோன்றி வருகின்றன. பலர் பண்டைய இலக்கியம் பற்றி அறிவார்கள். ஆனால் நம் நாட்டின் வெவ்வேறு மொழிகளில் வெளியாகும் தற்கால இலக்கியம் பற்றி அவ்வளவாக அறிந்திருக்க மாட்டார்கள். பல்வேறு இந்திய மொழிகளில் வெளியான உயர்ந்த கதைகள், புதினங்களின் சுருக்கத்தை இத்தொடரில் அளிக்கிறோம். இவற்றை இளைஞர்கள் உற்சாகத்துடன் படிப்பார்கள் என்றே நம்புகிறோம்.

ஆசிரியர்

## ஹரிநாராயண ஆப்டேயின் 'மீ'

ஒளி விளக்காக விளங்கி வந்த தன் தாயை திடீரென பாவு இழந்து விட்டான். அவனது தந்தை ராவோஜீ அதற்கு முன்பே வீட்டை விட்டு எங்கோ பொய்விட்டார். தனக்கு கிரகபலன் சரி இல்லை என்றும் அது சரியானதும் வீடு திரும்ப வேண்டும் என்றும் நினைத்து அவர் புனாவிலுள்ள தன் வீட்டை விட்டு பம்பாய்க்குப் போய் அங்குள்ள வீதிகளில் அலைந்து திரியலானார். ஆனால் அவர் எதிர்பார்த்த அந்த வேளை வரவே இல்லை.

பாவுக்கு அவனை விட ஒன்றரை வயது அதிகமான அக்கா கங்கி இருந்தாள். அவளை மூன்றாந்தாரமாக ஒருவனுக்குக் கல்யாணம் செய்து வைத்தார்கள். ஆனால் அவன் தன் மனைவியை ஒரு அடிமையிலும் கேவலமாக நடத்தவே அவள் தன் கணவனைப் பிரிந்து தன் தம்பியிடமே வந்து விட்டாள்.

பாவுவையும் கங்கியையும் சிவராம் என்ற பெரிய மனிதர் இடம் கொடுத்துப் பாதுகாத்து வந்தார். அவர் முற்போக்கானவர். அவரது மனைவியும் அவருக்கு அனுசரணையாக இருந்து வந்தாள். இத்தம்பதிகளுக்கு ஒரே மகள் சுந்தரி. அவளும் தன் தாய் தந்தையர் போல முற்போக்கு எண்ணங்கள் கொண்டவள்.

பாவுவும் கங்கியும் கல்வி பயில சிவராம் உதவலானார். ஆனால் அக்காலத்தில் பெண்கள் படிப்பதற்குக் கடும் எதிர்ப்பு இருந்தது. மேலும் கணவன் எவ்வளவு கொடியவனானாலும் கங்கி அவனை விட்டு வந்தது தப்பு என்று ஊரார் கூறி அவளைக் கேவலமாகப் பேசலானார்கள். இதனால் கங்கியும் பாவுவும் சிவராமும் பல பிரச்னைகளைச் சமாளிக்க வேண்டி வந்தது. ஆனால் அவர்கள் தாம் செய்வது சரியே என எண்ணிப் பிரச்னைகளைச் சமாளித்து வந்தார்கள்.

பாவு படித்து வழக்கறிஞராக ஆனான். ஆனால் அவன் வழக்கறிஞர் தொழிலை விட சமுதாயப் பிரச்னைகளில் அதிக ஆர்வம் காட்டினான். சமூகப் பிரச்னைகள் பற்றி சொற்பொழிவுகள் ஆற்றி வந்ததோடு சமூக சீர்திருத்தத்திற்காகப் பாடுபடும் ஒரு

பத்திரிகையின் ஆசிரியராகவும் இருந்து வந்தான். இதனால் அவனுக்கு ஒரு சில நண்பர்கள் கிடைத்தாலும் பகைவர்களே அதிகமாயினர்.

இதனால் பாவு மிகவும் வருந்தினான். ஆயினும் அவன் தன் வாழ்க்கையைச் சுயநலத்திற்கு அல்லாமல் பொது நலனுக்காக அர்ப்பணிக்கத் தீர்மானித்துக் கொண்டான். இந்தக் குறிக்கோளை அடைய தான் திருமணமே செய்து கொள்ளக் கூடாது என்று ஒருநாள் தீர்மானம் செய்து கொண்டான்.

அதற்கு மறுநாளே சிவராம் தன் மகள் சுந்தரியை அவனுக்கு விவாகம் செய்து வைக்க நினைப்பதாகக் கூறவே பாவு திகைத்துப் போனான். உலகில் அவன் மிக அதிகமாக மதிப்பது சிவராம் ஒருவரையே. ஆனாலும் அவன் தான் செய்து கொண்ட தீர்மானத்தை விளக்கிக் கூறவே அவனது முடிவு சரியே என்று சிவராமும் அவரது மனைவியும் சுந்தரியும் சங்கியும் கூறி அதனை ஏற்றனர்.

பாவு தன் பெயரை பாவானந்தர் என மாற்றிக் கொண்டு ஒரு ஆசிரமத்தை



அமைத்தான். அவனோடு சிலர் தொண்டர்களாகச் சேரவே அவன் தீவிரமாக சமூக சீர்திருத்தப்பணியில் ஈடுபட்டான். கொஞ்ச நாட்களில் அவனது உடல்நலம் குறைந்தது. தனக்குப் பிறகு தான் மேற்கொண்ட பணியை தொடர்ந்து செய்ய வேண்டுமென்று அவன் தன் சீடர்களிடம் கூறிக் கண்ணை மூடிவிட்டான்.

'மீ' (நான்) என்ற இந்த சமூக சீர்திருத்த நாவல் 1916 ல் பிரசுரிக்கப்பட்டது. இதன் ஆசிரியர் ஹரிநாராயண ஆப்டே. சுயசரித வடிவில் புதிய இலக்கிய பாணியில் எளிய நடையில் எழுதப்பட்டு அந்நாளைய சமுதாயத்தைப் படம் பிடித்துக் காட்டுவதாக அமைந்தது. மராத்திய இலக்கிய உலகில் இது இன்னமும் உயரிய இடம் பெற்று முன்மாதிரியாக விளங்கி வருகிறது.

# உங்களுக்குத் தெரியுமா?

1. பழங்காலத்தில் இறந்த உடல்களைப் பாதுகாக்க இந்தியாவிலிருந்து ஒருவகைத் துணியை வரவழைத்துக் கொண்டார்கள். அந்தத்துணியின் பெயர் என்ன?
2. மேற்கத்திய நாடுகளில் மருத்துவத் தந்தை என யாரைக் கருதுகிறார்கள்?
3. எல்லோராப் பகுதியிலுள்ள ஒரு ஹிந்துக் கோவிலைக் கட்ட நூறு ஆண்டுகளாயின. அந்தக் கோவில் எது?
4. நபிகள் நாயகம் பிறந்த இடம் எது?
5. 'பௌனார் ஆசிரமம்' யார் நிறுவினார்?
6. வங்காளத்தை ஆண்ட ஒரு முஸ்லீம் மன்னர் மகாபாரதத்தை வங்க மொழியாக்கம் செய்யக் கட்டளை இட்டார். அவர் யார்?
7. யுனெஸ்கோவின் ஆதரவில் சிறுவர்களுக்காக பயணம் புரிந்த ஒரு திரைப்பட நடிகை அண்மையில் காலமானார். அவர் நடித்த முதல் படத்தாலே அவர் ஆஸ்கார் அவார்ட் பெற்றார். அந்த நடிகை யார்? அந்த திரைப்படம் எது?
8. பொம்மலாட்டம் எந்த இரு நாடுகளில் ஆரம்பமாயிற்று?
9. குதுப்மினார், தாஜ்மஹல், கஜுராஹோ, அஜந்தா குகைகள் இவற்றில் மிகப் பழமையானது எது?
10. அணுகுண்டை முதன் முதலில் எங்கு எப்போது வீசினார்கள்?
11. 'பரம வீர சக்கரத்தை' முதன் முதலில் பெற்றவர் யார்?
12. லெனின் கிராடிற்கு அதன் பழைய பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது. அப்பெயர் என்ன?
13. ஆக்ராவின் முந்தையப் பெயர் யாது?
14. மியான் மாரின் (பர்மா) தலைநகர் எது?
15. தென்னிந்தியாவில் ஹிந்துக்கள் கூடப் போகும் முஸ்லீம் 'தர்கா' எது?

## விடைகள்

1. மஸ்லின்.
2. ஹிப்போகிரேடீஸ்
3. கைலாசநாதர் கோவில்
4. மெக்கா
5. வினோபா பாவே
6. சுஜ்ரத் ஷா
7. அப்ரோஹப் பர்ன்
8. இந்தியா, எகிப்து
9. அஜந்தா குகைள்
10. ஜப்பானில் ஹீரோ ஷீமா, 1945
11. மேஜர் சோமநாத சர்மா
12. செண்ட் பீடர்ஸ்பர்க்
13. அக்பராபாத்
14. யங்கூன் (ரங்கூன்)
15. நாகூர் தர்கா



# ஓடியே போனார்

கடம்பூரில் சீதாராமன் என்ற பண்டிதர் இருந்தார். அவர் சோதிடம், ஆருடம், மந்திரம், மாயம் இவற்றிலெல்லாம் கரைகண்டவர் என்று பெயர் பெற்றுவிட்டார். அதனால் அவருக்கு வரும்படியும் அதிகரித்தது. அவருக்கு கர்வம் தலைக்கு ஏறி விட்டது.

அவர் சொல்லும் சோதிடமோ ஆருடமோ பலருக்குப் பலிக்காது போனாலும் ஒரு சிலருக்குத்தான் பலித்தது. அதுபற்றி சீதாராமனிடம் கேட்டால் அதெல்லாம் விதி. விதியை யாரால் வெல்ல முடியும்'' என்று சொல்லி தப்பித்துக் கொள்வார்.

அவர் தமக்குப் பிடிக்காத இருவரைக் கடுமையாகத் திட்டினார். அவர் திட்டியபடியே அவர்கள் நோய்வாய்ப்பட்டார்கள். அதனால் ஊரார் சீதாராமன் சாபம் கொடுத்து விடுவார் என்றும் பயப்படலானர்கள். அவரும் "எவனாவது என்னை எதிர்த்துப் பேசினால் சபித்துவிடுவேன்'' என்று உறுமி ஆர்பாட்டம் செய்து வந்தார்.

இப்படி இருக்கையில் அந்த ஊருக்கு சுந்தரம் என்பவன் வந்து குடித்தனம் வைத்தான். அவன் அவ்வூரில் கொஞ்சம் நிலம் வாங்கி விவசாயம் செய்து வந்தான். அந்த ஊரில் ஒரு வீடு விலைக்கு வரவே அவன் அதை வாங்கி சரிப்படுத்தி வெள்ளை அடித்தான். கிருகப்பிரவேசம் செய்ய ஒரு நல்ல நாள் பார்க்கலாம் என நினைத்து சீதாராமனைக் கூப்பிட்டுக் கேட்டான்.

சீதாராமனோ "இந்த வீட்டை ஏன் வாங்கினாய்? என்னிடம் முன்னதாக ஒரு வார்த்தை கேட்டிருக்கலாமே. இதில் துஷ்டக்கிரகம் வாசம் செய்கிறது. இதை வாங்கி

—சிவனார் செல்வர்—

னவன் ஆறு மாதத்திற்குள் இறந்து போவான்'' என்றார் முகத்தைக் கோணி கொண்டே.

அதைக் கேட்டுக்கொண்டிருந்த சுந்தரத்தின் மாமியார் ''ஓய் பண்டிதரே! உன்னை நல்ல நாள் குறிக்கச் சொன்னால் எடுத்த எடுப்பிலேயே சாவு என்கிறாயா? உன் நாக்கு அழுகித்தான் போகும். உன் கைகால்கள் இழுத்து செயலற்றுப் போகட்டும். ஒருவன் வீடு மனை என்று வாங்கிவிட்டால் மற்றவருக்குப் பொறுக்காதே'' என்று இரைந்தாள்.

கூச்சலைக் கேட்டு அந்த வீட்டு வாசலில் கூட்டம் கூடி விட்டது. அதுவரை சீதாராமனை அந்த ஊரில் எதிர்த்துப் பேசியவரே கிடையாது. அதனால் சுந்தரத்தின் மாமியார் அவ்வாறு கூறியது அவருக்குக் கோபத்தை மூட்டியது. அவர் ''இதோ பாரம்மா! அனாவசியமாகப் பேசாதே. அப்புறம் நான் சபித்து விடுவேன்'' என்று உரக்கக் கூறினார்.

சுந்தரத்தின் மாமியாரோ சற்றும் சளைக்காமல் ''நீ என்ன துர்வாச முனிவரா சாபம் கொடுக்க? உன் சாபம் ஒன்றும் பலிக்காது. அப்படி நீ சாபம் கொடுத்து அது பலிக்கும் என்றால் நான் சற்று முன் உன்னைத் திட்டியது எல்லாம் சாபமே. அவை கூடப் பலிக்கும். தெரியுமா? சும்மா மிரட்டாதே உன்னால் நல்ல நாள் குறிக்க முடியுமானால் குறித்துக் கொடு.



இல்லாவிட்டால் நடையைக் கட்டு'' என்றாள்.

சீதாராமனால் அப்போது எதுவும் பேச முடியவில்லை. பேசினால் இன்னமும் பேச்சு வாங்க வேண்டுமே என்று பயந்து அவர் தலை குனிந்து கொண்டே போய் விட்டார். அவர் அதைப்பற்றி யோசித்தவாறே தெருவில் போய்க்கொண்டிருந்தபோது எதிரே வந்த ஒரு இரட்டை மாட்டு வண்டி மீது போய் மோதிக் கொண்டார்.

அந்த மோதலில் அவரது இடுப்பிலும் காலிலும் பலத்த அடிபட்டு விட்டது. கை ஒரு பக்கமாகத் தொங்கியது. பேசக்கூட முடியாமல் தம் நினைவு இழந்து விழுந்து விட்டார். அதைக் கண்டு சிலர் வந்து அவரைத் தூக்கிக் கொண்டு போய் அவரது வீட்டில் படுக்க வைத்தார்கள். அவரால் எழுந்து நடமாட முடியவில்லை. ஆறு மாதக் காலம் படுத்த படுக்கையாகக் கிடந்தார்

இதற்குள் அந்த ஊர்க்காரர்கள் சுந்தரத்தின் மாமியார் திட்டியது உடனேயே பலித்துவிட்டது என்று பேசலாயினர். அதுபற்றிப் பக்கத்து ஊர்களுக்கும் கதை கதையாகப் பரவியது. சீதாராமனின் சக்தி அவளது சக்திக்கு குறைவானதே என்று அடித்துக் கூறலானர்கள். சீதாராமனைக் கண்டு யாரும் முன் போல பயப்படவும் இல்லை. எல்லோரும் சுந்தரத்தின் மாமியாரிடம் பயபக்தியுடன் நடந்து வந்தார்கள்.



சீதாராமனின் உடல் நன்கு தேறிவிட்டது. அவர் "இந்த ஊரார் சுந்தரத்தின் மாமியார் சபித்தால் பலிக்கும் என்று நம்புகிறார்களே. என்னை இப்போது யாருமே மதிப் பதில்லை. அன்று கோபத்தில் தலைகால் தெரியாமல் தெருவில் போய் வண்டிமீது மோதிக் கொண் டேன். ஆனாலும் பரவாயில்லை. நான் ஒரு ஹோமம் செய்து சுந்த ரத்தின் மாமியாருக்கு சக்தி இல்லை என்பதை நிரூபிக்கிறேன். அதற் கான ஏற்பாடுகளைச் செய்'' என்று தன் மனைவியிடம் கூறினார்.

அவர்து மனைவி, அவர் சொன் னதை எல்லாம் பொறுமையாகக் கேட்டுவிட்டு "இந்த மாதிரி ஹோமம் செய்வதால் யாரையும் அடக்கிவிட முடியாது. சுந்தரத்தின் மாமியார் எந்த ஹோமம் செய்து சாபம் கொடுத்தாள்? அவள் எல் லோரையும் போலச் சாதாரண மானவள்தானே. ஏதோ வாய்க்கு வந்ததைத் திட்டினாள். அதன்படி நடந்துவிட்டது. அதனால் மக்கள் அவளை உங்களை விட மதிக்கிறார் கள். வேண்டுமானால் நீங்கள் அவளை விரோதித்துக் கொள்ளா மல் நல்லவிதமாகப் பேசி உங்க ளுக்கு வேண்டாதவர்களை அவ ளைக் கொண்டு திட்டச் செய்யுங் கள். இந்த மாதிரி ஹோமம், பூஜை என்றெல்லாம் வேண்டாம்'' என்றாள்.

சீதாராமன் தம் மனைவி கூறி யது பற்றி யோசித்துப் பார்த்தார். பண்டிதராகிய தாம் மக்களுக்கு நல்லது செய்வதை விட்டு சபிப் பேன் என்று மிரட்டுவது முறை யல்ல என்பது அவர் மனதில் நன்கு பட்டது. இனி அந்த கிராமத் தில் தான் என்ன சொன்னாலும் எடுபடாது எனக் கண்டு ஒருநா ளிரவு தம் குடும்பத்தோடு அவ் வூரை விட்டுப் போயே போய் விட்டார். அவர் எங்கே போனார் என்று யாருக்கும் தெரியவில்லை.






சுமார் முன்னூறு ஆண்டுகளுக்கு முன்மலையாள நாட்டில் தாழக் குடி என்ற கிராமத்தில் பாருக் குட்டி என்ற பெண் இருந்தாள். அவளது கணவன் கேசவன் தலை நகரில் அரசாங்க அதிகாரியாக வேலை பார்த்து வந்தான். அவன் தன் மனைவியைப் பார்க்க எப் போதாவதுதான் தலைநகரிலிருந்து வருவான். அதனால் பாருக்குட்டி வீட்டில் தனியாகவே வாழ்ந்து வர வேண்டியதாயிற்று.

பாருக்குட்டி முருக பக்தை. அவள் தினமும் அவ்வூரிலுள்ள முருகனின் கோவிலுக்குப்போய் "முருகா! நீ என் வீட்டிற்கு வந்து காட்சி அளித்து நான் கொடுக்கும் பிரசாதத்தை ஏற்றுக்கொள்ள மாட்டாயா?" என்று வேண்டி வர லானாள்.

இதை கவனித்து வந்த அக் கோவில் பூசாரி ஒருநாள் பாருக் குட்டி முருகனின் விக்கிரகத்தின் முன் நின்று வேண்டும்போது அந்த விக்கிரகத்தின் பின்னால் மறைந்து நின்று "என் பரம பக்தை யான பாருக்குட்டியே! இன்றிரவு உன் வீட்டிற்கு வந்து நீ அளிப் பதை ஏற்கிறேன்" என்று கூறி னான்.

அதைக்கேட்ட பாருக்குட்டி முருகக் கடவுள்தான் அவ்வாறு கூறினார் என்று நம்பி விட்டாள். உடனே அவள் வீட்டிற்குப்போய் வீட்டை எல்லாம் மெழுகிக் கோலம் போட்டு சர்க்கரைப் பொங்கல், வடை, பாயசம் முதலிய வற்றோடு விருந்து சமையல் செய்து விட்டு முருகனின் வருகைக்காகக் காத்திருந்தாள்.

இரவு எட்டு மணி இருக்கும். பட்டை பட்யைாய் விபூதி பூசி

—மலையாளப் பழங்கதை—



ருத்திராட்ச மாலை அணிந்த பண் டாரம் ஒருவன் பாருக்குட்டியின் வாசலில் நின்று ''அம்மா! தாயே'' என்று கத்திப் பிச்சை கேட்டான். வெளியே வந்து எட்டிப்பார்த் பாருக்குட்டி முருகக் கடவுள்தான் அந்த வேடத்தில் வந்திருக்கிறார் என எண்ணிவிட்டாள்.

அவள் உடனே ''சுவாமி! வர வேண்டும். உள்ளே வந்து அமர்ந்து நான் படைப்பதை ஏற்க வேண் டும்'' எனக் கூறி பண்டாரத்தை உள்ளே அழைத்துப்போனாள். அங்கே பலகை போட்டு வாழை இலை விரித்து பண்டாரத்தை உட்காரச் சொல்லி தான் சமைத்து வைத்திருந்ததைப் பரிமாறினாள்.

பண்டாரமோ திகைத்து ''இதெல் லாம் எதற்கு? எனக்கு ஒரு வாய் சோறு கொடுத்தால்போதும்'' என்று கூறியும் பாருக்குட்டி கேட் டுக் கொள்ளவில்லை.

வேறு வழியின்றி பண்டாரம் அந்த விருந்து சாப்பாட்டை மூக்குப் பிடிக்கச் சாப்பிட்டான். அவன் தான் சாப்பிடும் போது யாராவது வந்துவிடப் போகிறார்களே என்று பயந்து கொண்டிருந்தான். அவன் முடிவில் தயிர்சாதம் சாப்பிடும் போது கோவில் பூசாரி அவ்வீட்டு வாசலில் வந்து ''பக்தை பாருக் குட்டியே! வந்துவிட்டேன்'' என்று குரல் கொடுத்தான்.

அப்போதுதான் பாருக் குட்டிக் குத் தான் பண்டாரத்தைத் முருகக் கடவுள் என் எண்ணி விட்டது தவறு என்று தெரிந்தது. பண்டா ரமும், பயந்து நடுங்கவே பாருக் குட்டி அவனைப் பரணில் ஏறிப் பதுங்கி இருக்குமாறு கூறினாள். அவனும் அவ்வாறே பரணில் ஒரு மூலையில் பதுங்கிக் கொண் டான்.

பாருக்குட்டி கோவில் பூசாரி தான் முருகக் கடவுள் என நினைத்து விருந்து படைத்தாள். பூசாரியும் அந்த சாப்பாட்டை வயிறு வெடிக் கும் அளவிற்குச் சாப்பிட்டான். அப்போது அவ்வீட்டு வாசலில் ஒரு குதிரை வந்து நிற்கவே பாருக் குட்டி எட்டிப் பார்த்து ''ஆ! என்

கணவர் வந்துவிட்டார். அவருக்கு கடவுள் என்றால் கொஞ்சமும் பிடிக்காது. நீங்கள் சட்டென பர ணில் ஏறி ஒளிந்து கொள்ளுங் கள்'' என்றாள். பூசாரியும் பயந்து போய்ப் பரணில் ஏறிப்பதுங்கிக் கொண்டான்.

கேசவன் உள்ளே வந்து தனக்கு விருந்து சாப்பாடு தயாராக இருப் பது கண்டு ஆச்சரியப்பட்டான். அப்போது பாருக்குட்டி "என்ன திகைத்து நிற்கிறீர்கள்! நீங்கள் இன்று வரப்போவதை உங்கள் பித்ரு தேவர்கள் முன்கூட்டியே தெரிவித்துவிட்டார்கள். கடந்த இரண்டு நாட்களாக அவர்கள் என் முன் தோன்றி இப்படிச் சமைக்கச் சொன்னார்கள்'' என்றாள்.

கேசவனும் "ஆமாம்! நானும் இவ்வளவு நாட்களாக அவர்களை அலட்சியப்படுத்திவிட்டேன். இனி மேல் ஒழுங்காக அவர்களுக்கு 'திவசம்' செய்கிறேன்'' என்று கூறி சாப்பிடலானான். அவன் சாப்பிட்டு முடிந்ததும் கை அலம்பிக்கொண்டு வந்து உட்கார்ந்து வெற்றிலை போடலானான்.

பரண்மீது ஏறிப்பதுங்கிய பண் டாரமும் பூசாரியும் நன்கு தூங்கி விட்டனர். திடீரென்று பண்டா ரம் விழித்துக்கொண்டு "தாகம்! தண்ணீர்!'' என்று கத்தினான். கேசவன் அதைக் கேட்டு "என்ன சத்தம்?'' எனவே பாருக்குட்டியும் "இது பித்ரு தேவதையின் குரல். இரண்டு நாட்களாக இப்படித்



தான். அவர் தாகம் அடங்க ஒரு தேங்காய் கொடுத்தால் போதும்'' என்று கூறிவிட்டு உரத்த குரலில் ''ஏ பித்ரு தேவரே! பரணில் தேங்காய் இருக்கிறது அதை எடுத்து அங்கே உள்ள உரலில் உடைத்து தேங்காயின் நீரைக்குடித்து தாகத் தைத் தணித்துக்கொள்ளுங்கள்'' என்று கூறினாள். பண்டாரமும் இருட்டில் தேங்காயை தேடி எடுத்தான். அதை உடைக்க உரல் எங்கே என்று தடவவே உருண்டை யாகக் கல்போல ஏதோ தட்டுப் பட்டது. அதைக் கல்லென்று நினைத் துப் பண்டாரம் அதன் மீது தேங் காயை ஓங்கி அடித்தான். அது பூசாரியின் தலை!

பூசாரி உடனே ''யாரடா அது என்னை அடித்தது?'' என்று பண் டாரத்தைத் தாக்கவே இருவரும் அடித்துக் கொள்ளலாயினர். அப் போது பாருக்குட்டி ''பித்ரு தேவர் களே! சண்டை போடாதீர்கள் எல்லாம் சரியாகி விடும்'' என்று கூறினாள். பிறகு கேசவனிடம் ''நீங்கள் இவ்வளவு நாட்களாக அவர்களுக்கு 'திவசம்' செய்யாத தால் அவர்களுக்கு உங்கள் மீது கோபம். நான் அவர்களைச் சமாதானப்படுத்துகிறேன் நீங்கள் கொஞ்சம் வெளியே போய்விட்டு வாருங்கள்'' என்றாள்.

கேசவனும் ''பித்ரு தேவர் களே! சண்டையை நிறுத்துங்கள். இனிமேல் ஒழுங்காகத் தவறாமல் திவசம் செய்கிறேன். நான் இப் போது வெளியே போய்விடுகி றேன். நீங்கள் சண்டைபோடா மல் போய் வாருங்கள்'' என்று கூறி விட்டு உடனேயே வீட்டை விட்டு வெளியே சென்றான்.

இதுதான் சமயம் என்று பண் டாரமும் பூசாரியும் பரணிலிருந்து கீழே குதித்து கொல்லை வழியா கத் தப்பினோம் பிழைத்தோம் என்று ஓடிவிட்டார்கள். பாருக் குட்டியும் அப்பாடா என்று மூச்சு விட்டாள்!






காலையானதும், வானர சேனைக்கும் ராட்சஸ சேனைக்குமிடையே பலத்த போர் மூண்டது. ராட்சஸர்கள் கத்திகளாலும் கதைகளாலும் கோடாரிகளாலும் வானரர்களைத் தாக்க, வானரர்களோ கற்களையும் மரங்களையும் பாறைகளையும் பெயர்த்து எறிந்து எதிர்த் தாக்குதல் நடத்தினார்கள். போர் பயங்கரமாக நடக்கலாயிற்று.

இராமர் தம் அம்புகளால் ராட்சஸர் படையை அழிக்கலானார். அவரது அம்புமாரிக்கு முன் ராட்சஸர்களால் நிற்க முடியவில்லை. அவர் எப்போது அம்பை வில்லின் நாணில் வைத்து விடுகிறார் என்றோ அது எப்படி எங்கிருந்து வருகிறது என்றோ அவர்களுக்குப் புரியவில்லை. அவை 'விர்'ரெனப் பாய்ந்து புயல் போலத் தாக்கி ராட்சஸர்களை அழிக்கலாயிற்று.

ராட்சஸர்கள் போர்க்களத்தில் கொல்லப்பட்டு ஆயிரக்கணக்கில் விழுந்து கொண்டிருக்கிறார்கள் என்ற செய்தி இலங்கை நகருக்குள் பரவியது. ராட்சஸப் பெண்கள் தாம் இழந்த கணவன்மார்களையும், சகோதரர்களையும், மகன்களையும் நினைத்துப் புலம்பலானார்கள்.

அவர்கள் ''இப்படி எல்லாம் நடக்க மூலகாரணம் சூர்ப்பனகை தான். அவள் இராமரை விரும்பி அவரை மணக்க முடியாது போன

—தேவேந்திரனின் உதவி—



தால் இராவணனிடம் கூறி சீதையை கவர்ந்து வரச் செய்தாள். அதன் பயனாக இராவணன் இராமரது பகையை சம்பாதித்துக் கொண்டான். இராவணனால் சீதையைக் கவர்ந்து வரத்தான் முடிந்ததேயொழிய அவளை அடைய முடியவில்லையே. இப்படித் தோல்வியை அடைந்த இராவணன் இராமரை எங்கே வெல்லப் போகிறான்?'' என்று எண்ணி இறந்த தம் உறவினர்களுக்காகக் கண்ணீர் வடிக்கலானார்கள்.

இராமன் ராட்சஸப் படையை அழிப்பதைக் கண்ட இராவணன் கடுங்கோபம் கொண்டு ''ஆ எனக்குத் தூண்கள் போல இருந்த கும்பகர்ணன், பிரகஸ்தன், இந்திரஜித் ஆகியோரை அழித்த இந்த இராமனையும் இலட்சுமணனையும். நான் விட்டு வைப்போனா? அவர்களை இப்போதே கொன்று விடுகிறேன். பாருங்கள்'' என்று தன்னருகே நின்ற மகோதரனிடமும் மகாபார்சுவனிடமும், விருபாட்சனிடமும் உரத்த குரலில் ஆவேசத்துடன் கூறினான்.

இராவணன் எட்டு குதிரைகள் பூட்டிய ரதத்தில் அமர்ந்து அட்டகாசமாய் வானரப்படைகளுக்கிடையே நுழைந்தான். அவனுடன் மகாபார்சுவனும், மகோதரனும், விருபாட்சனும் வந்தார்கள். அவர்கள் வானரப்படையைக் கடுமையாகத் தாக்கினார்கள்.

இராமர் ராட்சஸப் படையைத் தாக்கி ஆயிரக்கணக்கில் ராட்சஸர்களைக் கொன்றது போலவே இராவணனும் வானரர்களைக் கொன்று தள்ளினான். அதைக் கண்ட சுக்கிரீவன் வானரர்களைக் காக்கும் பொறுப்பை சுஷேணனிடம் ஒப்படைத்தான். பிறகு அவனே பயங்கரமாய் ராட்சஸர்களைத் தாக்கிப் பல ராட்சஸ வீரர்களைக் கொன்றான்.

இதைக் கண்ட விருபாட்சன் ஒரு யானை மீது ஏறி அமர்ந்து வானரப்படைக்குள் நுழைந்தான். அவனை நுழையவிடாமல் தடுத்து சுக்கிரீவன் எதிர்க்கலானான். விரு

பாட்சன் சுக்கிரீவன் மீது அம்பு களைப் பொழிந்தான். விருபாட் சனைக் கொல்லத் தீர்மானித்து சுக்கிரீவன் ஒரு மரத்தைப் பிடுங்கி எடுத்துக் கொண்டான்.

அவன் அந்த மரத்தால் விரு பாட்சன் ஏறி இருந்த யானையை ஓங்கி அடித்தான். அந்த அடி யைத் தாங்க முடியாமல் யானை துள்ளிக் குதித்து விழுந்து இறந் தது. சட்டென யானை மீதிருந்து குதித்த விருபாட்சன் தன் வாளால் சுக்கிரீவனை பலமாகத் தாக்கினான். சுக்கிரீவன் சற்றும் சளைக்காமல் அத்தாக்குதலைச் சமாளித்து எதிர் தாக்குதலை நடத்தினான். அந்தத் தாக்குதலில் விருபாட்சனின் மூக்கு உடைந்தது. வாயிலிருந்து இரத்தம் கக்கிக் கீழே விழுந்து இறந்தான்.

விரூபாட்சன் இறந்ததைக் கண்டு இராவணன் வானரர்களை எதிர்க்க மகோதரனை அனுப்பி னான். மகோதரனும் பல வானரர் களைக் கொன்றவாறே வானரப் படைக்குள் வரவே சுக்கிரீவன் அவனை எதிர்க்கலானான். முதலில் சுக்கிரீவன் அவனது ரதத்தில் பூட்டப்பட்டிருந்த குதிரைகளை அடித்துக் கொன்றான். அதனால் கோபம் கொண்ட மகேந்தரன் ஒரு கதையை எடுத்துக் கொண்டு சுக்கிரீவனைத் தாக்க வந்தான்.

சுக்கிரீவன் அவனை எதிர்த்து அவனது கதையைச் சுக்கல் சுக்க



லாக உடைத்தான். அதன் பிறகு அவன் தன் கைகளை மடக்கி முஷ்டியால் மகோதரனை பலமாகக் குத்தினான். மகோதரனும் தன் முஷ்டியால் சுக்கிரீவனைத் தாக்க லானான். சற்று நேரம்வரை இப் படியே ஒருவரை மற்றவர் அடித் துக் கொண்டிருந்தார்கள். அதன் பிறகு அவர்கள் தம் கைக்குக் கிடைத்த ஆயுதங்களை எடுத்துக் கொண்டு தாக்குதலைத் தொடங் கினார்கள். மகோதரனின் வாள் சுக்கிரீவனின் கேடயத்தில் குத்திய தால் அதை அவனால் எடுக்க முடிய வில்லை. அந்த சமயம் பார்த்து சுக்கிரீவன் அவன் தலையை வெட்டி எறிந்தான்.



அச்சமயம் மகாபார்சுவன் அங்கதனோடு போர் புரிந்து கொண்டிருந்தான். அவன் வானரசேனையை உக்கிரமாகத் தாக்கி சிதற அடித்தான். அங்கதன் கோபமடைந்து மகாபார்சுவனைப் பயங்கரமாகத் தாக்கி அவனை அவனது தேரிலிருந்து கீழே விழச் செய்தான். அதே சமயம் கவாட்சனும் பார்ச்சுவனின் ரதத்தின் மீது பாறாங்கற்களை எறிந்து அதை சுக்குநூறாக உடைத்து விட்டான்'' அந்த ரதத்தில் பூட்டப்பட்ட குதிரைகள் அடிபட்டு இறந்து போயின.

கீழே விழுந்த மகாபார்சுவன் எழுந்து கவாட்சனையும் ஜாம்பவானையும் அம்புகளால் தாக்கினான். அதைக் கண்ட அங்கதன் ஒரு பெரிய பாறையை எடுத்து மகாபார்சுவன் பக்கம் எறிந்து அவனைத் தாக்க விரைந்து வந்தான். மகாபார்சுவனும் அங்கதனை எதிர்க்கலானான். இருவரிடையே கடும் போர் மூண்டது. முடிவில் அங்கதன் மகாபார்சுவனின் மார்பில் ஓங்கி ஒரு குத்து விடவே அவன் சுருண்டு கீழே விழுந்து இறந்து போனான்.

இந்த நிலையில் இராவணன் தானே தலைமை ஏற்றுப் போர் புரிவது எனத் தீர்மானித்தான். அவன் மற்ற வானர வீரர்களைத் தாக்காமல் இராமரையே தாக்கிக் கொல்வதுதான் அந்தஸ்திற்கு ஏற்றது என நினைத்தான். எனவே அவன் இராமரை நோக்கிச் செல்லும் போது தாமசாஸ்திரத்தை எய்தான். அது பயங்கரமானதாகும். அது வானரர்களைக் கதற கதற அடித்தது. அதனால் வானரர்கள் பயந்து ஓடலானார்கள். இதைக் கண்டு இராமர் இராவணனை எதிர்க்கச் சென்றார். அவருடன் இலட்சுமணனும் சென்றான்.

இராவணனை அம்புகளால் முதலில் தாக்கியவன் இலட்சுமணனே. ஆனால் இராவணன் அவனது அம்புகளை எல்லாம் தடுத்து விட்டு இராமரின் மீது அம்புகளைப் பொழியலானான். இராமரோ அந்த அம்புகளை எல்



லாம் தன் அம்புகளால் தடுத்து விட்டார். இப்படியாக அவர்களிடையே வெகுநேரம் வரை போர் நடந்தது. அதில் ஒருவர் விட்ட அஸ்திரங்களை மற்றவர் தடுத்து நிறுத்திக் கொண்டிருந்தார்.

இராவணன் இராமர் மீது ஆசுராஸ்திரத்தை எய்தான். அது மிக பயங்கரமான ஆயுதம். இராமர் ஆக்னேயாஸ்திரத்தால் அதனை அழித்தார். அதைக் கண்ட சுக்கிரீவன் முதலான வானரர்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தார்கள்.

இராவணன்தான் எய்த அஸ்திரம் வீணானது கண்டு ரௌத்திர அஸ்திரத்தை எய்தான். அதனை இராமர் காந்தர்வாஸ்த்திரத்தால் அழிந்தார். அப்போது இராவணன் சௌராஸ்திரத்தை எய்யவே இராமர் அதனையும் அழித்தார். இப்படியாகப் பல அஸ்திரங்களால் இருவரும் வெகுநேரம் வரை போர் புரிந்து கொண்டிருந்தார்கள். இராவணனின் உடலில் பல இடங்களில் காயம் ஏற்படவே அவன் சோர்ந்து போனான்.

அப்போது இலட்சுமணன் அம்புகளை எய்து இராவணனின் தேர்க்கொடியை அறுத்து வீழ்த்தினான். அவனது தேரோட்டியின் தலையைத் துண்டித்தான். இராவணனது வில்லையும் முறிந்து போகும்படிச் செய்தான்.

விபீஷணன் தன் அம்புகளால் இராவணனின் தேரில் பூட்டப்பட்ட குதிரைகளைத் தன் அம்புகளால் அடித்துக் கொன்றான். இராவணன் தேரிலிருந்து சட்டென்க் குதித்து தரையில் நின்றான். அவன் கோபம் கொண்டு விபீஷணன் மீது ஒரு சக்தி வாய்ந்த ஆயுதத்தை எய்தான். ஆனால் இலட்சுமணன் ஒரு அம்பை எய்து அதனை நடுவழியிலேயே தாக்கி அழித்தான்.

அப்போது இராவணன் மேலும் சக்திவாய்ந்த ஒரு ஆயுதத்தை எடுத்தான். அதனை அவன் எய்யு முன் இலட்சுமணன் இராவணனின் மீது அம்புகளை மழை போல எய்து செயலற்றவனாக ஆக்கி

விட்டான்.

அப்போது இராவணன் கோபம் கொண்டு "அடே இலட்சுமணா! என்னை இந்த சக்தியை எய்ய விடாமல் ஒரு நிமிட நேரம்தான் உன்னால் தடுக்க முடிந்தது. இப்போது அதனால் உன்னைத் தாக்கி உன் உயிரையே போக்கி விடுகிறேன்" எனக் கூறி அந்த சக்தி ஆயுதத்தை இலட்சுமணன் மீது எய்தான்.

அந்த சக்தி ஆயுதம் இலட்சுமணனை பலமாகத் தாக்கியது. அந்தத் தாக்குதலால் இலட்சுமணன் தன் நினைவை இழந்து விழுந்து விட்டான்; அது கண்டு இராமர் துக்கமும் கோபமும் கொண்டு இராவணனைப் பார்த்தார். அவனோ அவர்மீது அம்புகளைத் தொடர்ந்து எய்தவாறே இருந்தான். இராமர் அவற்றை எல்லாம் தடுத்துக் கொண்டே சுக்கிரீவன், அனுமார் முதலியவர்களிடம் "நீங்கள் இலட்சுமணனைப் பார்த்துக் கொள்ளுங்கள். நான் இராவணனை எதிர்த்துப் போராடி அவனைக் கொல்கிறேன்" என்றார்.

அப்படி என்னவோ அவர் சொல்லி விட்டாரேயொழிய உண்மையில் இலட்சுமணனின் நிலைக் கண்டு அவர் கலங்கிப் போனர். அப்போது சுஷேணன் இராமரிடம் "இலட்சுமணனைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம்.



அவனது உயிருக்கு எவ்வித ஆபத்தும் இல்லை. இவன் விரைவிலேயே முன் போலாகிவிடுவான்" என்று ஆறுதல் கூறினான்.

அவன் அனுமாரிடம் "நீ முன்பு போன இமயமலையின் சிகரத்தின் தென்பக்கத்தில் உள்ள மூலிகையை எடுத்துவா. அதைக் கொண்டு தான் இலட்சுமணனின் உயிர் போகாமல் தடுத்து நிறுத்த முடியும்" என்றார்.

அனுமாரும் இமயமலைக்குச் சென்றார். ஆனால் சுஷேணன் குறிப்பிட்ட மூலிகை எது என்று கண்டுபிடிக்க அவரால் முடியவில்லை. அதனால் அந்த மலையையே பெயர்த்து எடுத்தக்

கொண்டு இலங்கைக்கு வந்தார். அவர் அதனை சுஷேணனின் முன் வைத்து "என்னால் அந்த மூலிகையைத் தேடிக் கண்டு பிடிக்க முடியவில்லை. அதனால் அந்த மலையையே பெயர்த்து எடுத்துக் கொண்டு வந்து விட்டேன். நீயே தேடி எடுத்துக் கொள்" என்று கூறினார்.

சுஷேணனும் "பேஷ்! சற்றும் தாமதிக்காமல் இதனைக் கொண்டு வந்ததே நல்லது" என அனுமாரைப் பாராட்டிவிட்டு அந்த மலையிலிருந்து மூலிகையை எடுத்தான். அதன் சாற்றைப் பிழிந்து அவன் இலட்சுமணனின் மூக்கில் விட்டான். இலட்சுமணனும் தன் நினைவு பெற்று முன் போலாகி எழுந்து நின்றான்.

இராமரும் அதுகண்டு மகிழ்ந்து இராவனுடன் போர்புரியச் சென்றார். அப்போது இராவணன் தேரில் அமர்ந்து வந்து கொண்டிருந்தான் இராமரோ தரைமீது நின்று கொண்டிருந்தார்.

இதைக்கண்ட தேவேந்திரன் தன் ரதத்தைத் தன் தேரோட்டி மாதலியுடன் இராமரிடம் அனுப்பி வைத்தான். தங்கத்தாலும் வைர, வைடூரிய மணிகளாலும் ஒளிமயமாக விளங்கும் அந்த ரதத்தை மாதலி இராமரின் முன் நிறுத்தினார்.

அவன் இராமரிடம் "தேவேந்திரன் தங்களுக்கு வெற்றி கிடைக்க வேண்டும் எனக் கோரி தன்னுடைய ரதத்தை அனுப்பி இருக்கிறார். இத்துடன் அவருடைய வில், அம்புகள், கவசம், சக்தி ஆயுதம் ஆகியவையும் உள்ளன. தாங்கள் இதில் அமர்ந்து கொண்டு போர்புரியுங்கள். நான் இதனை ஓட்டிச் செல்கிறேன்" என்றான்.

இராமரும் அந்த ரதத்தில் ஏறி அமர்ந்தார். மாதலி அதனைச் செலுத்த பலத்த போர் மூண்டது.



# ஒருகாசு தான்!

**பா**க்தாதை அமீர்ஷா என்ற சுல்தான் ஆண்டபோது ரஹ்மான் என்ற பணக்காரன் திடீரென இறந்து விட்டான். அவனது வாரிசு என்று யாரும் இல்லை.

அப்போது அப்துல்லா என்ற போக்கிரி அப்பணக்காரனின் சொத்தை தானே அடைய நினைத்து சுல்தானிடம் போய் "பாதுஷாவே! நான் வாரிசில்லா ஏழை. ரஹ்மானும் வாரிசில்லாதவன். நாங்கள் இருவரும் அல்லாவின் மக்கள். அதனால் அவனுக்குச் சகோதரன் முறை ஆகிறது. ஒரு சகோதரன்வாரிசு இல்லாமல் இறந்தால் அவனது சொத்து அவனது மற்ற சகோதரனுக்கே சேரும். எனக்கு ரஹ்மான் சகோதரன் என்று நிருபித்து விட்டேன் அதனால் அவனது சொத்து எனக்குச் சேர வேண்டும்" என்றான்.

சுல்தானும் "இரு. உன் சொத்தைக் கொடுக்கிறேன்" எனக்கூறி பொக்கிஷ காரனிடம் ஏதோ சொன்னான். பொக்கிஷகாரனும் ஒரு தினாரைக் கொண்டு வந்து கொடுத்தான். அதைக் கண்ட அப்துல்லா திகைத்துப் போய் "என்ன! இந்த ஒரு காசுதானா எனக்கு!" என்று கூவினான்.

சுல்தானும் "ஆமாம் அவ்வளவுதான். ஏனென்றால் உன் போன்ற வாரி சற்ற சகோதரர்கள் ரஹ்மானுக்கு பல்லாயிரம் பேர்கள் இருக்கிறார்கள். அவர்கள் எல்லோருக்கும் ஒரு தினார் வீதம் கொடுத்தால் அவனது சொத்து தீர்ந்துவிடும். அதனால் தான் ஒரு தினார் கொடுக்கப்பட்டது" என்றான்.

அப்துல்லா தலை குனிந்தவாறே அதை வாங்கிக் கொண்டு தன் வீட் டிற்குச் சென்றான். அங்கு ஒரு அரசாங்க அதிகாரி வந்து "உன் மீது இரக் கப்பட்டு சுல்தான் இதைக் கொடுக்கச் சொன்னார்" என்று கூறி ஆயிரம் தினார்களை கொடுத்து விட்டுச் சென்றான்.





# வள்ளியின் திருமணம்

காட்டில் ஒரு இடத்தில் நஞ்சன் ஒரு குடிசை போட்டு வாழ்ந்து வந்தான். அவனது முதல் மனைவியின் மகள் வள்ளி. நஞ்சன் தன் மனைவி இறந்ததும் காளி என்பவளை இரண்டாவது மனைவியாக மணந்து கொண்டான். அவளுக்கு மல்லி என்ற பெண் குழந்தை பிறந்தது. வள்ளியும் மல்லியும் வளரலாயினர்.

காளிக்கு தன் மகளைத்தான் பிடிக்கும். தன் சக்களத்தியின் மகளான வள்ளியைக் கொடுமைபடுத்தியே வந்தாள். வள்ளியிடம் எல்லா வேலைகளையும் செய்யச் சொன்னாள். தன் மகள் மல்லியையோ எந்த வேலையையும் செய்ய விடவில்லை. வள்ளிதான் கஷ்டப்பட்டாள்.

அந்த சிறு பெண்ணை வீட்டு வேலைகளை எல்லாம் செய்ய வைத்தாள். மல்லியையோ செல்லமாக வளர்ந்தாள். இப்படியே இரு பெண்களும் வளர்ந்து மணப் பருவத்தை அடைந்து விட்டனர். அப்போது நஞ்சன் வள்ளியின் திருமணம் பற்றிக் காளியிடம் பேசலானான்.

காளியோ "வள்ளியைக் கல்யாணம் செய்து கொடுத்து விட்டால் வீட்டு வேலைகளை எல்லாம் யார் செய்வார்கள்? முதலில் மல்லிக்குத்தான் கல்யாணம். பிறகு கையில் பணத்தைச் சேர்த்து வைத்துக் கொண்டு வள்ளிக்கு கல்யாணம் செய்வது பற்றி யோசிக்கலாம்" என்றாள்.

இப்படித்தன் தந்தையும் சிற்றன்னையும் இரவில் பேசிக்கொண்டதைக் கேட்டு வள்ளியின் மனம் வருந்தியது. இனி வாழ்நாள் முழுவதும் சிற்றன்னைக்கு அடிமை

—காரை. குருமூர்த்தி—

யாகத்தான் இருக்க வேண்டுமா என்று எண்ணி யோசிக்கலானாள். அப்படி வாழ்வதை விட உயிரை விடுவதே மேல் என நினைத்து அவள் சற்று தூரத்திலுள்ள பாழும் கிணற்றிற்குப் போய் அதில் விழப் போனாள்.

அப்போது ஒரு பிசாசு அவள் முன் தோன்றி அவளைத் தடுத்து "நீ ஏன் தற்கொலை செய்து கொள்ள வந்தாய்?" என்று கேட்டது. வள்ளியும் "என் சிற்றன்னை என்னைக் கண்டபடி திட்டிக் கொடுமைப்படுத்துகிறாள். எனக்குக் கல்யாணமே செய்து வைக்கப் போவதில்லையாம். பணம் சேர்ந்த பின் தான் அது பற்றி யோசிப்பாளாம்" என்றாள்.

பிசாசும் "பணம் தானே வேண்டும்? இதோ பார். ஒரு சாக்குப் பையைக் கொடுக்கிறேன். நீ அதை உன் வீட்டில் நாளைக் காலை ஓரிடத்தில் வை. உன் சிற்றன்னை திட்டும் ஒவ்வொரு வசைச் சொல்லுக்கும் இந்தப்பையில் ஒரு தங்க நாணயம் வீதம் விழுந்து கொண்டே போகும். இந்த சக்தி இப்பைக்கு நாளை ஒரு நாள் மட்டுமே இருக்கும். நாளை மாலைக்குள் உன் திருமணத்திற்கு வேண்டிய பணம் சேர்ந்து விடும். அதை உன் தந்தையிடம் கொடுத்து உனக்குத் திருமணம் செய்து வைக்கச்சொல்" என்று கூறி ஒரு சாக்குப்பையைக்



கொடுத்தது. வள்ளியும் அதை வாங்கிக் கொண்டு போய் தன் வீட்டு மாட்டுக்கொட்டிலில் மறைத்து வைத்தாள்.

மறுநாள் காலையில் எழுந்த போது காளி வள்ளியைத் திட்டியவாறே "போய்ப் பால்கறந்து கொண்டு வா" என்றாள். வள்ளியும் ஓடிப்போய் தான் மறைத்து வைத்த பைக்குள் கை விட்டுப் பார்த்தாள். அதில் மூன்று தங்க நாணயங்கள் இருந்தன. அது கண்டு வள்ளி திருப்தி அடைந்தாள்.

அன்று முழுவதும் சிற்றன்னை வள்ளியைத் திட்டிய போதெல்லாம் ஒரு வசைச் சொல்லிற்கு ஒரு



கொடுத்தது. அதனால் அவள் திருமணத்திற்குத்தான் அதனைச் செலவிட வேண்டும். அப்படி செய்யாமல் இப்பணத்தைக் கொண்டு மல்லிக்குக் கல்யாணம் செய்து வைத்தால் பிசாசு உங்கள் இருவரையும் ஆட்டி வைத்துப் படாத பாடு படுத்தும்'' என்றான்.

அப்போது காளி ''அப்படியா? நாளைக்கே நான் மல்லியை அனுப்பி இதே போலப் பணம் பெறவழி செய்கிறேன்'' என்றாள். மறுநாள் இரவு அவள் மல்லியிடம் வள்ளி செய்தது போலவே செய்யச் சொல்லிப் பாழும் கிணற்றிற்கு அனுப்பினாள்.

மல்லியும் கிணற்றில் விழப் போவது போல நடிக்கவே பிசாசும் அவள் முன் தோன்றி அவளைத் தடுத்து ''நீ ஏன் தற்கொல செய்து கொள்ள முயல்கிறாய்?'' என்று கேட்டது. அவளும் வள்ளி கூறியதைப் போலத்தான் சிற்றன்னையின் கொடுமை தாங்காமல் அவ்வாறு முடிவு எடுத்ததாகக் கூறினாள்.

பிசாகும் ''சரி. உனக்கு ஒரு சாக்குப் பை கொடுக்கிறேன். உன்னை அவள் திட்டினால் ஒரு வசைச் சொல்லிற்கு ஒரு தங்க நாணயமாக இந்தப் பையில் சேர்ந்து கொண்டே போகும். அந்தப் பணத்தைக் கொண்டு உன் திருமணத்தை நடக்கச் செய்து சுகமாக வாழ்.

தங்க நாணயம் வீதம் பையில் சேர்ந்து கொண்டே போயிற்று. அன்று அப்பையில் முந்நூறு தங்க நாணயங்கள் சேர்ந்து விட்டன. வள்ளி அந்தப் பையை எடுத்துப் போய்த் தன் தந்தையிடம் கொடுத்து அது கிடைத்த விதத்தைக் கூறித் தன் விவாகத்தை நடத்தி வைக்குமாறு சொன்னாள்.

நஞ்சனும் அவ்வாறே செய்வதாக கூறவே காளி ''அதெல்லாம் இல்லை. இந்தப் பணத்தைக் கொண்டு மல்லியின் திருமணத்தைத்தான் முதலில் செய்துவிட வேண்டும்'' என்றாள். ஆனால் நஞ்சன் ''முடியாது. இந்தப் பணத்தைப் பிசாசு வள்ளிக்குத்தான்

இந்தப் பைக்கு இந்த சக்தி நாளை ஒரு நாளுக்கு மட்டுமே இருக்கும்'' என்று கூறி ஒரு பையை அவளிடம் கொடுத்தது.

மல்லியும் அந்தப் பையை எடுத்துக் கொண்டு போய் அவளது தாயாரிடம் காட்ட அவளும் ''சரி, நாளை காலையிலிருந்து உன்னைத் திட்டி குறைந்தது இதில் ஆயிரம் தங்க நாணயங்களையாவது சேர்த்து விடுகிறேன்'' என்றாள்.

இதேசமயம் அந்நாட்டு மன்னன் தன் ஒரே மகனின் திருமணம் பற்றி அவனுடன் பேசிக்கொண்டிருந்தான். இளவரசனும் ''தான் காட்டில் நஞ்சன் என்பவனின் இரு பெண்களைப் பார்த்தேன் அவர்கள் மிக அழகானவர்கள். அவர்களில் ஒருத்தியைத்தான் நான் மணந்து கொள்வேன்'' என்றான். மன்னனும் ''சரி உன் இஷ்டப்படியே செய். நாளையே போய் அவர்களை பார்க்கலாம்'' என்றான்.

இருவரும் விடியற்காலையிலேயே நஞ்சனின் குடிசையை அடைந்தார்கள். அப்போது வள்ளி வீட்டு வாசலைப் பெருக்கிக் கோலம் போட்டுக்கொண்டிருந்தாள். குடிசைக்குள் காளி தங்க நாணயங்கள் பெறும் ஆசையில் தன் மகள் மல்லியை திட்டிக்கொண்டிருந்தாள்.

புதிதாகத் தன் வீட்டிற்கு வந்தவர்களை வள்ளி வாசலிலிருந்த



கட்டிலில் உட்காரச் சொல்லி ''என் தந்தையைக் காண வந்திருக்கிறீர்களா? அவர் வெளியே போயிருக்கிறார். இன்னும் சற்று நேரத்தில் வந்து விடுவார். உள்ளே என் சிற்றன்னை இருக்கிறாள். இதோ கூப்பிடுகிறேன்.'' எனக் கூறி ''அம்மா!'' யாரோ வந்திருக்கிறார்கள் வந்து பார்'' என்று குரல் கொடுத்தாள்.

காளியோ மல்லியைத் திட்டியவாறே ''முடியாது. இன்று இந்நாட்டு மன்னனே வந்தாலும் பார்க்க மாட்டேன்'' என்று கூறினாள். அதைக் கேட்ட இளவரசன் ''சரி, நான் பிறகு வருகிறேன்'' என்று கூறித் திரும்பிச் சென்

றான். வழியில் தன் தந்தையிடம் "இவள் தான் வள்ளி. இவளை நான் மணக்கிறேன். உள்ளே இருந்து பேசியவள் இவளது சிற்றன்னை காளி. அவளும் அவள் மகளும் நமக்காகக் கூட வரவில்லை. இதிலிருந்து அவர்கள் எப்படிப்பட்டவர்கள் என்று தெரியவில்லையா?" என்றான்.

மறுநாள் அரசாங்க வீரர்கள் வந்து நஞ்சனிடம் "நேற்று மன்னரும் இளவரசரும் இங்கே வந்திருந்தார்கள். இளவரசர் உன்மகள் வள்ளியைப் பார்த்தார். அவர் அவளை மனம் செய்து கொள்ள விரும்புகிறார். உன்னை உன் குடும்பத்தோடு மன்னர் அழைத்து வரச் சொன்னார்" என்றார்கள். நஞ்சனும் வள்ளியையும் மல்லியையும் காளியையும் அழைத்துக்கொண்டு அரண்மனைக்குச் சென்றான்.

காளி வள்ளியின் அதிர்ஷ்டம் கண்டு திகைத்தாள். அவள் வள்ளியிடம் "நீ ராஜகுமாரனை மணந்து கொள்ளப் போகிறாய். என் மகள் மல்லிக்கு யார் கிடைக்கப் போகிறார்களோ?" எனக் கூறினாள். வள்ளியும் "கவலைப்படாதே அம்மா. இளவரசரிடம் சொல்லி நல்ல இடமாகப் பார்க்கலாம்" என்றாள்.

அவர்கள் அரண்மனையை அடைந்ததும் மன்னனும் இளவரசனும் அவர்களை வரவேற்றார்கள். பிறகு வள்ளிக்கும் அரசகுமாரனுக்கும் திருமணம் என்பதும் நிச்சயிக்கப்பட்டது. வள்ளி இளவரசனிடம் "என் தங்கை மல்லிக்கும் யாராவது ஒரு நல்ல அரசாங்க அதிகாரியை மணமுடித்து விடுங்கள்" என்று வேண்டினாள்.

இளவரசனோ "அரசாங்க அதிகாரியா? கூடாது. உன் தங்கை உனக்குச் சமமாக இருக்க வேண்டும் அவளை இன்னொரு நாட்டு இளவரசனுக்கு மனம் செய்து வைக்கலாம்" என்று கூறினான்.

அதுகேட்டு காளியின் மனம் குளிர்ந்தது.



# அம்புலிமாமா செய்திகள்

## 'கொலம்பஸ் அல்ல, பாஹியான்'



இத்தாலி நாட்டு கிரிஸ்டோபர் கொலம்பஸ் 500 ஆண்டுகளுக்கு முன் அமெரிக்காவைக் கண்டுபிடித்தார் என உலகம் கருதுகிறது. இந்த வரலாற்றுப் புகழ் நிகழ்ச்சியின் 500 வது ஆண்டு விழாவை சென்ற டிசம்பர் 12-ல் விமரிசையாகக் கொண்டாடினார்கள். ஆனால் இப்போது அமெரிக்கா சென்றுள்ள லியான் யுன் ஷான் என்ற சீன வரலாற்று ஆய்வாளர் இது உண்மையல்ல என்கிறார். சீன பௌத்தயாத்திரியான பாஹியான் (334-422) கொலம்பிசிற்கு ஆயிரம் ஆண்டு களுக்கு முன்பே அதாவது கி.பி. 412-ல் 'பபாடி' நாட்டிற்குச் சென்றார் என்று அவர் கருதுகிறார். இந்நாடு அமெரிக்காவின் மேற்குக் கரையில் இன்றைய லாஸ் ஏஞ்சல்ஸ் அருகே இருந்தது என அவர் கூறுகிறார். 1500 ஆண்டு களுக்கு முன் பாஹியான் எழுதிய சுயசரிதையை மேற்கோள்காட்டி லியான்யுன்ஷான் இக்கருத்தை ஒரு உலகமாநாட்டில் கூறினார்.



## காலண்டர் மேதை

இந்த ஆண்டு குடியரசு நாள் எந்த கிழமையில் வந்தது? செவ்வாய். ஜனவரி 1 எந்தக் கிழமை? வெள்ளிக் கிழமை. 1990 ஜனவரி 1 எந்த கிழமை? இதற்கு 1990 காலண்டரைப் பாராமலே திங்கட்கிழமை என்று ஈரோட்டைச் சேர்ந்த அனீஷ் நடராஜன் என்ற ஐந்து வயதுச் சிறுவன் சரியாக் கூறிவிடுகிறான். ஒரு தேதியைக் கூறி அது எந்தக் கிழமை என்று கேட்டால் இச்சிறுவன் சரியான விடையைச் சொல்கிறான். அதனால்தான் இவனை யாவரும். 'காலண்டர் மேதை' என அழைக்கிறார்கள். ஐந்தாவது வயதில் இவ்வளவு திறமை மிக்கவன் இன்னும் என்னென்ன சாதனைகள் புரிவானோ பார்க்கலாம்.

## தனியாகத் தென் துருவத்தில்



நார்வே நாட்டு எர்லிங்காகே என்பவர் 1990ல் சிலருடன் வடதுருவத்தில் பயணம் செய்தார். 24 வயதான இந்த வழக்கறிஞர் தற்போது 59 நாட்கள் தனியாகவே பயணம் செய்து இந்த ஆண்டு ஜனவரி முதல் வாரத்தில் தென் துருவத்தை அடைந்தார். இவர் தினமும் 26. மிமீட்டர் வீதம் 1310 கி. மீட்டர் தூரத்தை ஸ்கீயிங் செய்து குறிப்பிட்ட தேதிக்குப் பத்துநாட்கள் முன்பாகவே தாம் போய்ச் சேரவேண்டிய இடத்தை அடைந்து விட்டாராம். தனியாகத் தென்துருவத்திற்குப் போய்ச் சேர்ந்த முதல் மனிதர் எர்லிங் காகே.




# செயல்படு

ஒரு ஊரில் ஒரு மாடு மேய்பவன் இருந்தான். ஒருமுறை அவன் சந்தைக்குப்போய் சில அத்யாவசியமான பொருள்களை வாங்க வேண்டி வந்தது. ஆனால் தன் ஆடுமாடுகளைப் பார்த்துக்கொள்ள யாருமே இல்லையே என எண்ணி என்ன செய்யலாம் என்று அவன் யோசித்தான். முடிவில் அவன் 'தெய்வமே' நீயே இவற்றைப் பார்த்துக்கொள்' என்று சொல்லிவிட்டு சந்தைக்குக் கிளம்பிவிட்டான்.

அவன் கொஞ்சதூரம் போனபோது சந்தையிலிருந்து திரும்பி வந்து கொண்டிருந்த ஒருவன் அவனைக் கண்டு "சந்தைக்கா போகிறாய்? உன் ஆடுமாடுகளை யார் பார்த்துக்கொள்கிறார்கள்?" என்று கேட்டான். மாடு மேய்ப்பவனும் "அந்த தெய்வம் தான்" என்று கூறிவிட்டுப் போனான்.

அதைக்கேட்ட அந்த மனிதன் ஆடுமாடுகள் மேயும் இடத்திற்கு நேராகச் சென்றான். அங்கு நன்றாக கொழுத்திருந்த ஆடுகளை அவன் தன்னோடு ஓட்டிக் கொண்டு "முட்டாள்! இப்படி யாரிடமும் ஆடுமாடுகளை ஒப்படைக்காமல் தெய்வம் காக்கும் என்று போகிறானே" எனச் சிரித்தவாறே கூறிக்கொண்டு தன் வீட்டிற்குச் சென்றான்.

சந்தையில் தன் வேலையை முடித்துக் கொண்டு திரும்பி வந்த மாடு மேய்ப்பவன் தன் மந்தையில் இருபத்தைந்து ஆடுகள் குறைவதைப் பார்த்து "தெய்வமே! உன்னை நம்பி என் ஆடுமாடுகளை விட்டுப்போனேன். இப்போது இருபத்தைந்து ஆடுகளைக் காணோம். இனிமேல் உன்னை நம்பமாட்டேன்" என்று உரக்கக்

—ரஞ்சித் ரவி—

கூவினான்.

மறுநாளே அவன் தன் மந்தையை பாதுகாக்க இரண்டு நாய்களை வாங்கி வந்தான். அந்த நாயை விற்றவன் அவனிடம் "நீ இதற்கு நல்ல மாமிசம் கொடுக்க வேண்டும் இவற்றிற்கு வயிறு நிறைய உணவு கொடுத்தால்தான் ஒழுங்காக வேலை செய்யும். அப்படிக் கொடுக்காவிட்டால் சரியாக வேலை செய்யா. அதனால் தினமும் மாமிச உணவைக் கொடு" என்றார்.

மாடு மேய்ப்பவனும் அப்படியே செய்வதாகக் கூறினான். அவன் தினமும் மாமிசத்திற்கு எங்கே போவது என்று யோசிக்கலானான். அவனுக்கு ஒருவழி தோன்றியது அதன்படி மாடு மேய்ப்பவன் அவற்றிற்கு தினமும் இரண்டு எலிகளை உணவாக கொடுக்கலானான்.

அப்படியும் தினமும் மந்தையில் தினமும் ஒரு ஆடு வீதம் குறையலாயிற்று. அதற்குக் காரணம் அப்பகுதியில் ஓநாய்கள் ஏராளமாக இருந்தன. அவற்றில் ஒன்று தினமும் மந்தையில் புகுந்து கிடைத்த ஆட்டைக்கொன்று இழுத்துப் போயிற்று. ஓநாய் வருவதை நாய்கள் பார்த்துக்கொண்டுதான் இருந்தன. அவை ஓநாய் ஆட்டைக் கொன்று தின்றபின் மீதம் விட்டுப்போன மாமிசத்தைத் தின்று தன் வயிறை நிரப்பிக் கொண்டன.

தினமும் ஒரு ஆடாகத் தன் மந்தை ஆடுகள் குறைவதைக் கண்ட



மாடு மேய்ப்பவன் "இதென்ன! மந்தையின் காவலுக்கு நாய்களை வைத்தும் பயனில்லையே. என்ன செய்வது" என்று கவலைப்படலானான்.

ஒருநாள் ஒரு தாடிக்கார சாமியார் அவ்வழியே வரவே மாடு மேய்ப்பவன் அவரிடம் தன் கஷ்டத்தையும் நஷ்டத்தையும் கூறி அழுதான்! "கடவுளை நம்பினேன். இருபத்தைந்து ஆடுகள் போயின. நாய்களைக் காவலுக்கு வைத்தேன். தினமும் ஒரு ஆடாகக் குறைகிறது. இனி யாரைத்தான் நம்புவது?" என்று கண்கலங்கியவாறே அவன் கூறினான்.

அதுகேட்டு அவர் "நீ நாய்கள் உண்ண என்ன கொடுக்கிறாய்? என்று கேட்டார். அவனும் "தினமும் இரண்டு எலிகளைக் கொடுக்கிறேன்" என்றான். அது கேட்டு அவர் "சரிதான்; அதனால்தான் தினமும் ஆடு குறைகிறது. நீ அவ்வப்போது உன் உணவிற்காக ஒரு ஆட்டை வெட்டுகிறாய் அல்லவா? அந்த மாமிசத்திலிருந்து கொஞ்சம் உன் நாய்களுக்குப் போடு" என்றார்.

அதுமுதல் தினமும் தான் சாப்பிடும் மாமிசத்தில் கொஞ்சம் எடுத்து அவன் நாய்களுக்குப் போடலானான். அதற்கு நல்ல பலன் இருந்தது. அன்று முதல் மந்தையிலிருந்து ஒரு ஆடுகூட குறையவில்லை. வயிறு நிறையத் தின்ற நாய்கள் அன்று வந்த ஓநாய்களை விரட்டின.

ஓநாய்களும் "நாங்கள் விட்டுப் போகும் மாமிசம் வேண்டாமா?" எனக் கேட்கவே நாய்களும் "உன் எச்சில் மாமிசம் எதற்கு? என் எஜமானன்தான் எங்களுக்கு வயிறு நிறைய மாமிசம் கொடுக்கிறாரே" என்றன. ஆனால் ஓநாய்கள் அதை லட்சியம் செய்யாமல் மந்தைக்குள் நுழைய முயலவே நாய்கள் அவற்றைத் தாக்கிக் கிழித்துக் கொன்றன.



# இயற்கை விநோதங்கள்

## அழிந்து வரும் புலிகள்

மத்திய அரசு இருபது ஆண்டுகளுக்கு முன் வகுத்த திட்டத்தின்படி நம்நாட்டு 17 மிருகப் பாதுகாப்பு நிலையங்களில் உள்ள புலிகளின் எண்ணிக்கை 1800 லிருந்து 4700க்கு உயர்ந்துள்ளது. ஆனால் இந்த சரணாலயங்களில் திருட்டுத்தனமாக வேட்டையாடுவது நடைபெற்று வருகிறது. இம் மாதிரி நம் நாட்டில் மட்டுமல்ல நேபாளம் பூடான், பங்களாதேஷ் ஆகிய நாடுகளிலும் நடை பெறுகிறது. உலக முழுவதிலும் உள்ள சுமார் 8000 புலிகளில் 60 சதம் நம் உப கண்டத்தில்தான் உள்ளது. கடந்த டிசம்பரில் டில்லியில் நடந்த உலக சுற்றுப்புற சூழ் நிபுணர்கள் மாநாட்டில் புலிகளைக் காக்கக் கடும் நடவடிக்கைகள் எடுக்காவிட்டால் 2020வது ஆண்டிற்குள் புலிகளை மிருகக்காட்சி சாலைகளில் மட்டுமே காணக்கூடிய நிலை ஏற்பட்டு விடும் என அவர்கள் எச்சரித்திருக்கிறார்கள்.

## அழிந்து வரும் உயிரினங்கள்

புலிகள் மட்டுமல்ல, மேலும் 150 வகை உயிரினங்கள் அழிந்து போய்க் கொண்டிருக்கின்றன. பறவைகள், பாலுட்டும் உயிரினங்கள், புழுக்கள் போன்றவை இவை. சிங்கம், யானை, காட்டுக் கழுதை, காண்டா மிருகம், இண்டஸ் டால்பின் ஆகியவை நசிந்து கொண்டே போகின்றன என்று வல்லுனர்கள் கூறி வருகிறார்கள். இவை நம் நாடு முழுவதிலும் பரவியுள்ளது. எனவே மக்கள் யாவரும் இயற்கையை ஒட்டி வாழ வேண்டும் என்று நினைத்து நடந்தாலே இந்த உயிரினங்கள் அழியாமல் இருக்கும் என அவர்கள் கருதுகிறார்கள்.

## இருவகைக் கருத்துக்கள்

ஒரு காலத்தில் டினோஜார் எனப்படும் ராட்சஸப் பல்லிகள் உலகில் ஏராளமாக இருந்தன. அவை திடீரென அழிய இரு காரணங்களைக் கூறுகிறார்கள். சுமார் நாற்பது லட்சம் ஆண்டுகளுக்கு முன் எரிமலைகள் வெடித்து நெருப்புக் குழம்பு வழிந்து பூமி முழுவதும் பரவி மூடியதால் ராட்சஸப் பல்லிகள் அழிந்தன என்று சில விஞ்ஞானிகள் கருதினார்கள். வானத்திலிருந்து விழுந்த ஒரு கிரகத்தாலோ அல்லது ஒரு வால் நட்சத்திரம் விழுந்ததாலோ இத்தகைய பேரழிவு ஏற்பட்டது என வேறு




சிலர் கருதுகிறார்கள். 65 லட்சம் ஆண்டுகளுக்குமுன் இவ்வாறு நடந்தபோது உலகின் 70 சத உயிரினங்கள் அழிந்தன. இவற்றில் ராட்சஸப் பல்லிகளும் அழிந்தன என்கிறார்கள்.

# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ. 100

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1993 ஜூன் மாத இதழில் வெளியிடப்படும்**



M. Natarajan



Anant Desai

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ ஏப்ரல் 10ந் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ. 100/- பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-600 026

---

## பிப்ரவரி மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ: **அமைதிக்கா தவிக்கின்றாய்?**

இரண்டாவது போட்டோ: **உணவுக்கா துடிக்கின்றாய்?**

பரிசு பெற்றவர்: **சி. கார்த்திகேயன், புதுப்பேட்டை, சென்னை - 2**




Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.

Ishq mera mazhab hai. Rasna Mera Drink Hai.



Yesterday at my school drama, I was like Amitabh Bachchan as in 'Khuda Gawah.' And everyone clapped and applauded. And when I came home you know what Mummy asked? 'So little Ustaad, what do you want to drink?' You know what I said? 'Ishq mera mazhab hai, Rasna Mera Drink Hai.' And then I drank up the whole jug of pyaara Rasna...









I Love You Rasna

More Taste — More Fun

Mudra : EAMR: 6641